

# திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி
# தேவஸ்தான வேத அத்யாபக கோஷ்டி
## சிறப்பு மலர் : 1985

ஸ்ரீமதே ராமானுஜாய நம :



ஊழிதொறும் ஊழிதொறும் உலக முய்ய
உம்பர்களும் கேட்டுய்ய அன்பி னாலே

SRIVATSAM

வாழியெனும் பூதம்பேய் பொய்கை மாறன்
மழிசையர்கோன் பட்டர்பிரான் மங்கை வேந்தன்

கோழியர்கோன் தொண்டர்துகள் பாணன் கோதை
குலமுனிவன் கூறியநூ லோதி வீதி

வாழியென வருந்திரளை வாழ்த்து வார்தம்
மலரடியென் சென்னிக்கு மலர்ந்த பூவே.

விலை ரூ. 50/-

ஸ்ரீ வைணவர்களின் விவாகங்களில் சீர்பாடலின்போது ஸ்ரீ ஆண்டாளின் கனாப் பாசுரங்களை அதாவது ''வாரணமாயிரம்'' தொடங்கி ''நன்மக்களைப் பெற்று மகிழ்வரே'' என்பது வரையில் ஒவ்வொரு பாடலினீற்றிலும் ப்ராசீன மாய் அநுசந்திக்கப்படும் பாட்டுக்கள்:

**தோழீ நான் கண்ட கனா வெல்லாம் நற்கேளாய்**
**என் தோழீ சொல்லாய்நீ ராக்கண்ட நற்கனா**
**ஓராலிலையி லொடுங்கி வளர்ந்தோனை**
**உகிரா லிரணியன் உடலைப் பிளந்தோனை**
**கூராழி சங்கம் தரித்தோனை மாயோனை**
**சீரானைப் பாடித் தளிர் முன்படுப்போமே.**

கடைசியாக அநுசந்தித்து முடிப்பது:—

மாங்காய், பலாக்காய், வழுதுணங்காய் மஞ்சளோடு இஞ்சி சிறுகிழங்கு கையும் மோகராவுமாய்க் காண வாரீர்.

SRIVATSAM

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:





SRIVATSAM

सर्वधर्मान्परित्यज्य
मामेकं शरणं व्रज।
अहं त्वा सर्वपापेभ्यो
मोक्षयिष्यामि मा शुचः॥

**திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமி தேவஸ்தான**

**வேத அத்யாபக கோஷ்டியின்**

**(எழுநூறு ஆண்டு கடக்க வெய்திய)**

# அறுபதாண்டு நிறைவு சிறப்பு மலர்

# 1985

*With the best compliments from:*

# The Balussery Benefit Chit Fund (Private) Limited

**"Balussery Buildings"**

30, SINGARACHARI STREET, TRIPLICANE

SRIVATSAM

**Madras-600 005.**

**Phone :** 841194 & 841062 **Telegrams :** "EVERMANS"

*Branches :*

NEW DELHI, BOMBAY, BANGALORE

CALCUTTA, COIMBATORE

*Working Hours :*

9 a.m. to 1 p.m 2 p.m. to 5.30 p.m.

**"Build Better Savings Through Balusserys"**

**Estd : 1947**

# உள்ளுறை



## புகுமுகம்



## திவ்யதேசங்களில் அத்யாபக கைங்கர்யங்கள்



SRIVATSAM

## எண்மர் ஈந்த நிதி



SRIVATSAM

## க்ஷேத்ரானுபவம் முதலியன

## வரலாற்றுப் பின்னணியில்



## ஸுப்ரபாதம், மங்களம், பாசுரங்கள், பட்டோலை, கட்டியம் முதலியன

SRIVATSAM



## கவிதைகள்

## நானாவித விவரங்கள்



## Articles in English



SRIVATSAM

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# ஸமர்ப்பணம்

SRIVATSAM

ஸத் ஸம்ப்ரதாய **தீபிகை** என்று போற்று தற்குரிய அரியதான இப்பொக்கிஷத்தை ஸந்மார்க்க நிஷ்டர்களான மஹநீயர்களது திருவடிகளில் ஸமர்ப்பிக்கின்றோம். திவ்ய தேசங்களுள் மிகவும் புராதனமாய், கயை, புஷ்கரம், நைமிசாரண்யம் போன்றவற்றிலும் பாவனமாய், நாரதாதிகளால் பாராட்டப்பெற்று, பரமரிஷிகள் தங்களது தவத்திற்கு ஏற்றதான ஸ்தலம் என்று பெரிதும் விரும்பப்பெற்று, ப்ருந்தாரண்யம், துளஸிவனம் என்று எங்கும் ப்ரஸித்திபெற்று இலங்குவதாய், ஆழ்வார்களால் திருவல்லிக்கேணி என்று மங்களாசாஸநம் செய்யப்பெற்றதாய், எம்பெருமானாரது திருவவதாரத்திற்குக் காரணமாயிருந்த இந்தப் புனிதமான க்ஷேத்ரத்தில் நெடுங்காலமாக ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்ரீமத் பராங்குச பரகால யதிவராதிகளாலே வகுக்கப்பெற்ற ஸத் ஸம்ப்ரதாயத்திலே ஊன்றியிருந்து கைங்கர்யங்களிலே அநந்யப்ரயோஜநமாக ஈடுபட்டு வந்துள்ளனர். இவர்களுள் பெரும்பாலோர் உபயவேதாந்தம் வல்லவர்களாகவும் ஸத்ஸம்ப்ரதாய அதிகாரிகளாகவும் பெருமை வாய்ந்தவர்கள், இக்கைங்கர்யபரர்கள் நெடுங்காலமாக ஒரு கோஷ்டியாக இணைந்து ஸந்நிதி கைங்கர்யங்களைப் பேரூக்கமுடன் செய்து வந்தனர் என்பது பழைய குறிப்பீடுகளிலிருந்து (records) தெற்றென விளங்கும். 1923-ஆம் வருஷம் ஒரு சிறு குழப்பத்தின் காரணமாக ஏற்பட்ட சென்னை உயர்நீதிமன்றத்தின் தீர்ப்பின்மூலம், அன்றுமுதல் இந்தக் கோஷ்டி பூர்ண சுதந்திரமாக இயங்கி வருவது என்பது நிலைநாட்டப்பெற்றுப் பெருமையுடன் இலங்கி வருகின்றது. ஸந்நிதியில் வேதபாராயண அத்யாபக கைங்கர்யங்களுடன் அவ்வப்போது எம்பெருமானார் தரிசன ப்ரவசனமும் பகவத் விஷய காலக்ஷேபங்களும் இந்தத் திவ்ய தேசத்தில் நடந்துவருகின்றன. பக்தர்கள் உத்ஸவங்களில் ஈடுபட்டு உபயங்கள் நடத்தியும், மண்டபாதி கைங்கர்யங்கள் செய்தும், வாகனங்கள், திருவாபரணங்கள் ஸமர்ப்பித்தும், உத்ஸவாதிகளுக்குக் கட்டளைகள் நிருமித்தும் வருகின்றனர்.

தொன்மையாக இந்தக் கோவிலில் ஸந்நிதிகளில் நடந்துவரும் வேத-அத்யாபகாதி கைங்கர்யங்களின் விவரமும், இது போல் கோயில், திருமலை, பெருமாள் கோவில், ஸ்ரீவில்லிபுத்தூர், வானமாமலை, திருக்குறுங்குடி, ஸ்ரீபெரும்பூதூர்போன்ற மற்றைய திவ்யதேசங்களில் நிகழும் இத்தகைய கைங்கர்யங்களின் விவரணமும் இவ்வெளியீட்டில் உள்ளன. ஸ்ரீவைஷ்ணவர்கள் தமது வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாகக் கொள்வனவற்றுள் தலை சிறந்தவை திவ்யதேசவாஸமும், திருநாம ஸங்கீர்த்தன ரூபமான திவ்ய ப்ரபந்தாநுஸந்தானமும், இந்தத் திருவல்லிக்கேணியிலே வஸிப்பவர்களது பரம பாக்யம், இங்கு எழுந்தருளியுள்ள எம்பெருமான்கள் கண்டருளும் திவ்ய உத்ஸவங்களை அநுபவிப்பதும், ஆழ்வார்களது அருளிச் செயல்களை எம்பெருமான்களின் ஸந்நிதியில் விண்ணப்பஞ் செய்யச் செவிமடுத்தலும் ஆகும். எம்பெருமான்கள் அருளும் திவ்ய ஸேவைகள், வேத அத்யாபக கோஷ்டி, இந்தக் கோஷ்டியை முன்னம் அலங்கரித்த ஸ்வாமிகள், தற்போது கைங்கர்யம் செய்யும் ஸ்வாமிகள் — இவ்விவரங்கள் அனைத்தும் ஏறக்குறைய 150-க்கும் மேல் திருமுகப்படங்களாக இந்த நூலில் ப்ரசுரித்துள்ளோம், அன்பர்கள் ஸேவித்து மகிழ்வார்களாக.

மேலும் இந்தக் கோஷ்டியின் வரலாற்றுச் சுருக்கமும், இந்தக் கோஷ்டி எவ்வாறு இயங்கிவந்துள்ளது என்பதற்குச் சான்றாக சில நடவடிக்கைக் குறிப்புகளும், கைங்கர்யபரர்களது வரலாறும், ஸந்நிதியில் விண்ணப்பம் செய்யும் ஸுப்ரபாதம், திருமஞ்சனக் கட்டியம், தனி உத்ஸவங்களில் ஓதப்பெறும் பட்டோலை போல்வனவும் இணைக்கப்பெற்றுள்ளன. மற்றும் இந்த ஸத்ஸம்ப்ரதாயம் பற்றிப் பண்டித வரர்கள் அநுக்ரஹித்த வ்யாஸங்களும், எம்பெருமான்களிடம் ஈடுபட்ட பெரியோர்கள் பக்தியால் பொழிந்த கவிதைகளுள் சிலவும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

இந்தத் தீபிகைக்கான விவரங்கள் வ்யாஸங்கள் புகைப்படங்கள் போன்றவற்றையருளிய பெரியோர்களுக்கு எங்களது க்ருதஜ்ஞதையைத் தெரிவிக்கின்றோம். இந்த நூல் பெரியோர்களது ஆசியும் அனைவரது ஆதரவும் பெற விழைகின்றோம்.

இங்ஙனம்

**பதிப்புக்குழு**

திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதி
ஸ்வாமி தேவஸ்தான
வேத-அத்யாபக கோஷ்டி

SRIVATSAM





Sri Rukmini Samedha Sri Venkatakrishna Parabrahmanae Namah.
Sri Parthasarathyswamynae Namah.
Srimathae Ramanujaya Namaha.

# FOREWORD

This special souvenir is in honour of the Triplicane Sri Parthasarathi Swami Devastana Veda-Adhyapaka Goshti which is rendering unstinted service to Sri Parthasarathi, unmindful of any recompense whatsoever. Steeped in the spirit of Kainkaryam as the sole aim of a devout Sri Vaishnava, the Goshti dedicates itself to chanting the Holy Vedas and the holy hymns of Alwars (Nalayira Divya Prabhandam) and Acharyas. This is in accordance with Ramanuja-Divya Agna - the Commandment of Sri Ramanuja-which is the measuring rod of divine devotion till eternity. The greatness of the Divya Prabhandam is that the Lord Himself Who dwells in the holy shrines comes out in grand procession and in unfathomable glee for the recitation of the holy verses of the Alwars during the three weeks specially allotted for this purpose, and it is gratifying to note how our Acharyas have given an unfading importance to this noble Tamil language which alone enjoys the fortune of spreading among the masses the holy ideas embedded in the Vedas, namely simple Bhakti and devotion. It is held that Thirumangai Alwar himself recited in Deva gana his Thirunedunthandagam and arranged for the annual Thiruvoimozhi Thirunal during which the thousand verses of Thiruvoimozhi are recited before Sri Ranganatha. This was in the eighth century, A.D. Following this Sriman Nathamunigal arranged for recitation of all the four thousand verses in Sri Rangam, and since then this has been taking place in all the Vishnu shrines. Poet Kamban has sung that festivals in Vishnu shrines will shrink into insignificance without the recital of the Divya Prabandam.

Divya Prabhandam has acquired an equal importance with the Vedas and both are associated with the worship not only in shrines but also in the homes of the devotees, and sung in chorus during daily worship and festivals.

The importance of Triplicane – Thiru - Alli - Keni, named after the Lily Pond in the centre of this kshetra is due to the fact that Sri Parthasarathi Swami along with the other Divya Murtis—Sri Mannatha, Sri Rama, Sri Varadaraja and Sri Thelliya Singam, is present during the recital of Divya Prabhandam often and often during the year—more often than in any other Divya Desam. This holy place is one of the most ancient ones, considered holier than places like Gaya, Pushkaram and Naimisaranyam, commended and sought by great sages as a fit place for penances, and known throughout the wide country as *Brindaranyam* and *Thulasivanam*. Its glory has been sung by three of the Alwars. Crowning all this glory is the fact that Sri Parthasarathi Swami is the cause of the avatar of Sri Ramanuja. It is even believed that Sri Parthasarathi Swami Himself incarnated as Sri Ramanuja to bless humanity.

SRIVATSAM

This holy shrine has been a centre of worship since the fourth century A. D. and has received benefactions from the various rulers of the Pallava, Chola, Pandiya and Vijayanagar dynasties. It played a significant role during the days of the East India Company as well and the authorities were all much attached to this temple. The Veda-Adhyapaka Goshti has been in existence for over 760 years, as revealed by records, and has grown from strength to strength. According to available records as early as 1923 A.D. twenty-four vedic scholars, well versed in Vedanta as well, were the pillars of the Goshti. Notwithstanding the hindrances which naturally creep up from time to time in such organisations, the Goshti has been functioning sucessfully steering safe through troubled waters and is shining with added brilliance in the daily divine service in the temple. Thanks to the goodwill, blessings, cooperation and guidance of elderly residents and scholars in the locality, the Goshti is functioning in perfect unison. In addition to this Adhyapaka Kainkaryam, some Adhyapakas have served in conducting and improving the worship and festivals and instituted endowments which are now remembered in their names. Sri T. N. C. Ananthachariar has endowed his house in Car Street as Manavala Mamunigal Trust and Sri A. T. K. Singarachariar in whose name exists the present Singarachari Street - has endowed his house in the street as Nammalwar Trust.

Besides the routine Veda Adhyapaka Kainkaryam, some members of the Goshti have been doing Satsampradaya Pravachanas and Bhagavad-vishaya Kalakshepams and have been organising classes for the younger generation in Vedas, Divya Prabhandam and Stotras. The Goshti takes a very active part in all the festivals throughout the year. Particular mention must be made of the grandeur of the Goshti during the annual festivals of Sri Parthasarathi Swami and Sri Thelliya Singam and more so during the annual avatara Utsava of Sri Ramanuja in Chitrai and the avatara utsava of Sri Manavala Mamunigal in Aipisi.

The Goshti is now presenting this special souvenir to give the general public an idea of the services expected of a Sri Vaishnava. It contains photograph pictures of all the Divya Murthis in different sevas on the *Peetam,* in palanquins and on Vahanams, their special *Thirukkolams* during the various festivals in the year and also a plan of the temple with its imposing towers, vimanams and mantapams and the grand Kairavini in front. Besides it gives a historic sketch of the Gosthi since its inception, the greatness of the scholars who adorned the Goshti in the past, the invaluable services of the present members, and texts of Suprabhatham, Thirumanjana Kattiyams, Pattayams read out during Special functions. It abounds in valuable articles on Vaishnavism, details regarding festivals and recitation of Vedas and Divya Prabhandams in Triplicane and in other similar famous Divyadesams. Poems flowing in ecstasy from the pen of savants absorbed in the Kalyana gunas of the Divyamurthis in this temple form a special feature of this souvenir.

The members of the Goshti express unanimously their grateful thanks to the scholars who have contributed valuable articles and to the devotees who have helped in bringing out this memorable volume by liberal donations and by securing advertisements. Special mention is to be made of Sriman C. Jagannathachariar, M.A., L.T., Vidwan, the most renowned Tamil Scholar, for having undertaken the heavy and onerous task of getting the souvenir edited and printed, going through the proofs, single-handed and successfully bringing it out.

12, Car Street
Triplicane

T. S. Rajagopala Iyengar, B.A. L.T.,
*President, Editorial Board*

# The Happy Cycle of Trust

## Your Trust Helps us Grow, our Growth Increases Your Trust

Yes, Sundaram Finance is surging ahead with your support-With its own funds (Capital and Reserves) increasing from Rs. 158 lakhs in 1972 to Rs. 722 lakhs in 1983 What's more, the assets of the company as at 31st December 1983 exceeded Rs. 116 crores.

The corporate policy of the company has always been service-oriented, which means, when the customer comes to Sundaram Finance, he gets not just hire-purchase finance or leasing facilities but service throughout the period of contract.

SRIVATSAM

With the kind of Service we offer, it's not surprising that the number of customers has grown. Today, Sundaram Finance has on its rolls 8500 customers and over 65,000 depositors.

## The People to Trust in Hire purchase and Equipment leasing

## SUNDARAM FINANCE LIMITED

Regd. Office : 180, Mount Road, Madras-600 006.
Central Office 190, Mount Road, Madras-600 006.

ஸ்ரீமதே ராமானுஜாய நம:



ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய கோயில் ஸ்ரீரங்கநாராயண ஜீயர்ஸ்வாமியின்

# மங்களாசாஸனம்

ஸ்ரீரங்கேசய ஜயத்வஜெள விஜயதே
ராமாநுஜோயம் முநி:

திருவரங்கம் முதலான அனைத்துத் திவ்யதேசங்களும் திருமந்த்ரார்த்தத்துக்கு எல்லை நிலம். பரத்வ செளலப்யங்களையே பிரதானமாகவுடைய ஸ்ரீமந்நாராயணனே திவ்யதேசங்கள்தோறும் உளன்.

வேதமானவன்; வேதத்தின் சுவைப் பயனானவன்; விழுமியமுனிவர் விழுங்கும் கோதிலின் கனியானவன். வேதம் நான்கு. அவற்றின் 'திருநான்மறைகள்' என்றும், 'கேட்டு ஆரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே' என்றும் சொல்லப்படும் ஆழ்வார்களின் அருளிச்செயல்கள். சகலருக்கும் தத்வஹித புருஷார்த்தங்களை அறிவிக்கும் சொல்லுருவமானவை வேதம். வேதத்தின் சுவைப்பயனானவன் அர்ச்சாரூபியாய் திவ்யதேசங்கள்தோறும் திகழுமவன். பாமரர்கட்கும், பாலைவனத்தில் உள்ள நீர்போல், பயிலுமவர்கட்கும் இந்நிலத்தில் சுலபனானவன். பரவித்தொழும் தொண்டர்கள் தமக்குக் கதியாய், ஸகலாபேக்ஷித ப்ரதனாய், மாமணியானவன். அவன் புகழைப் பேசும் அருளிச்செயல்களான திவ்யப்ரபந்தங்களை எம்பெருமான் கேட்டு ஆனந்திக்கிறான். "யதோவாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ" என்ற ஸம்ஸ்க்ருத வேதங்களைப்போலன்றியே, எம்பெருமானைச் சாக்ஷாத்கரித்து அவனுடைய கல்யாண குணங்களை அனுபவித்து அவைகளில் ஆழங்கால்பட்டு, அவனைக் காண்கையில் தரித்தும், பிரிகையில் மோஹித்தும், பக்தி பாரவச்யத்தாலே, ஆழ்வார்களிடமிருந்து அமுத வெள்ளமாய் ப்ரவஹித்த பாசுரங்களே திவ்யப்ரபந்தங்கள். அவ்வாழ்வார்கள் மங்களாசாஸனம் செய்தவிடங்களே திவ்ய தேசங்கள். அதனாலேயே ஆழ்வார்கள் ஸ்தானத்தில் இருந்துகொண்டு அவர்களின் திவ்யப்ரபந்தங்களை ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸேவிக்க, அதைக்கேட்டு ஆனந்தித்துப் பின் செல்கிறான் எம்பெருமான் என்பது ஸம்ப்ரதாய ஸாரம்.

SRIVATSAM

ஆழ்வார்கள் பாசுரம்கொண்டு எம்பெருமானார் விசிஷ்டாத்வைத பரமான ஸ்ரீபாஷ்யம் செய்தருளினார் என்றால், என்னே அருளிச்செயலின் பெருமை. அதை ஸேவிக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களின் பெருமை!

'சாதுகோஷ்டியுட்கொள்ளப்படுவாரே' என்னும்படி அத்தகைய ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியைச் சேவிப்பதும், இக்கோஷ்டியில் கலந்து 'வேதம் வல்லார்களைக் கொண்டு, விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து' என்கிறபடியே மங்களாசாஸனம் செய்வதுமே பரமபுருஷார்த்தமாகும். இத்தகைய சாதுகோஷ்டி திருவரங்கம் முதலான அனைத்துத் திவ்யதேசங்களிலும் திகழ்ந்தபோதிலும், பஞ்சக்ஷேத்ரமாகிய திருவல்லிக்கேணியில் உள்ள கோஷ்டியானது மிக விலக்ஷணமானது. அதற்குக் காரணம் தமிழர்

களின் தலைநகரான சென்னையில் 'பாலேய் தமிழர் இரைகாரர்பத்தர்' எனப்படுமவர்களாகிய தூயர்தம் தமிழ் நகரமாம் திருவல்லிக்கேணியாகையாலேதான், இது 'மாதவன் பூதங்கள் மண்மேல் பண்தான் பாடிநின்றாடிப் பரந்துதிரிகின்ற' இடமாதலால், இக்கோஷ்டி இங்குள்ள எம்பெருமானுக்கு உகப்பாகப் பல்லாண்டு பல்லாண்டாக மேன்மேலும் வளரவேண்டும். 'இரியும் கலியும் நீங்கி.........பெரிய கிதயுகம்பற்றி, பேரின்பவெள்ளம் பெருக ..........இரியப்புகுந்து இசைபாடி எங்கும் இடங்கொண்டன'வாக இக்கோஷ்டியை ஆக்கவேணுமாய்த் திருவரங்கத்தம்மானைப்பிரார்த்திக்கின்றேன்.

இக்கைங்கர்யம் அநந்யப்ரயோஜனமானது என்பது இங்கு விசேஷிக்கத் தக்கது. இந்நிலை நீடிப்பது அவசியம். காலத்தின் போக்கும் விலைவாசியின் போக்கும் கவலையை விளைவிக்கிறதெனினும் செல்வர்களும் பெரியோர்களும் இதைப் பரிஹரித்துத் திருமால் அடியார்களைப் பூசிக்கும் பாக்யம் பெறவேணும்.

'மாமலராள் புணர்ந்த பொன்மார்பன் பொருந்தும் பதிதொறும் புக்கு நிற்கும் குணந்திகழ்கொண்டல்' ஆன இராமாநுச முனி கோயிலில் தென்னரங்கன் செல்வம் முற்றும் திருத்தியருளினன். பின்னர் திருவரங்கனின் திருமேனி ரக்ஷைக்காகவும் திருவாராதன வகைகள் குறைவற நடப்பதற்காகவும் தனது விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தைப் பரப்பவும், ஒரு மடத்தை ஸ்தாபித்தார் திருவரங்கத்தில். அம்மடத்தை அலங்கரிக்கும் ஸங்யாஸிகளின் வாரிசு க்ரமத்தையும் நிர்ணயித்து வைத்தார். பெரிய பெருமாளின் திருமேனி ரக்ஷைக்காக வாரந்தோறும் புனுகுகாப்புத் தைலமும், ப்ரதி ஸம்வத்ஸரமும் இரண்டுதடவை சாந்துக்காப்பும் சாத்துவதையும், நம்பெருமாள் திருமேனி ரக்ஷைக்காக வருஷத்துக்கு ஒருமுறை உள்காப்பு சாத்துவதையும் கண்காணிக்கும் கைங்கர்யத்தை மடத்தின் பிரதான கார்யமாக விதித்தருளினர். முற்காலத்தில் கோயிலின் சகல கார்ய நிர்வாகமும் இம்மடத்துக்கு இருந்தது. அரசாங்கத் தலையீட்டால் அது க்ரமேண குறைவடைந்து தற்காலம் இதனடியில் கண்ட*

---

*Description of duties and privileges attached to the Plaintiff's Mutt as mentioned in the plaint:—

1. For the use on the foreheads of the images of the God and the Goddess in the Srirenganatha Temple, the Plaintiff to take out, either himself or by proxy, the prescribed quantity of purified camphor and "Punugu Sattam" ointment kept under Plaintiff's seal in the temple and to issue by his proxy the prescribed quantity to be mixed with the sandal for use as "kalinji" to the said deities.

SRIVATSAM

2. To supervise the daily ritual in the temples in accordance with the tenets of the Tengalai sect and the Pancharatra Agama Sastra and to have the delinquents punished.

3. To have "Pulugappu Thailam" ointment prepared every Friday by extracting the ointment from "Punugu Sattam" and by adding to it the prescribed quantity of purified camphor and to divide the same into three parts one to 'Periyakoil Srirenganatha Temple', one to 'Nachiar Temple' and one to 'Sakrathalwar Temple' and have them applied to the deities of those temples under the supervision of Plaintiff or his proxy.

4. During the time of annual abishekams known as "Jeshtabishekams" in the temples of Srirenganathar, Nachair, etc. Sakarathalwar etc. in the months of Ani and Adi (June - August) the Plaintiff by himself or by his proxy to test the quantity of purified camphor known as "Pachakarpuram", saffron, Kungamappoo and Kastoori produced by the temple managers, then to have "Santhukappu" ointment prepared for application to the big Deity in the Chief inner shrine by mixing 'Sandal' 'Punugu Sattam Ointment' and 'Purified Camphor' from his custody, then to have prepared "Ulkappu" for being applied within the coats of armour of the "Utsava" images of tha Periyakovil and the Nachiar Temple, mixed with purified camphor Kastoori from Plaintiff's custody and Sandal to issue from his custody the quantity of purified camphor necessary for the abishekam to the said Deities, such camphor being applied with Sandal, to see finally that the mixtures are applied to the Deities as mentioned above. The Plaintiff has also several other minor duties to be done by proxy on the above occasions which are all regulated by "mamool" or immemorial usage.

5. During the month of Purattasi, (September—October) every year, to cause 'Santhukappu" to be prepared by Plaintiff's men in the same way as aforesaid and see it applied to the recumbent Deity in the inner shrine.

6. Every year on the day following the "Jeshtabishekam,' Plaintiff to send through his men "Sirappu Alangaram" to the said big Deity in the "inner shrine" from the store-house known as Kottaram in the temple at the expense of the temple.

7. To decide about the ritual to be done in the temple whenever disputes arise about them, according to the tenets of the Tengalai persuasion and Pancharatra Agamam.

8. To supervise the ritual in the temples,

9. To cause the prescribed quantity of purified camphor to be issued by his proxy for use in the abishekam known as "Choornabhishekam" during every seventh day festival and on other "Choornabishekam" occasions in the temple,

10. To give daily religious instructions to the disciples of the mutt and the temple servants in the Plaint mutt and to fix the usual red-hot seals on the shoulders of the disciples of the mutt at their expense.

11. To keep in his custody a set of keys of the boxes containing jewels etc., of the temples in the room known as Thekkilarai in the temple and to cause the same to be opened and shut by proxy as occasion requires, and to cause his seal to be put upon the locks of all the rooms etc., where any of the temple articles are kept along with the seals of the other officers and cause his seals over them to be examined before they are opened on necessary occasions.

SRIVATSAM

12. To appoint his own men as Lechanaikaran and Sthanathipathi and to exercise his duties and privileges in the temple by them as proxies without any reference to the temple trustees,

(Sd.) MUNDABBA BANGARA,
*Subordinate Judge,*
for Mr. T. T. Rengachariar.

கார்யங்கள் மட்டுமே இம்மடத்தைச் சார்ந்ததாக இருக்கின்றன. இதுபற்றி மாஜி கோயில் நிர்வாகியாயிருந்த திரு. K. K. மேனன் எழுதிய குறிப்பில் கண்டுள்ள ஒரு வாக்யம் அர்த்தபுஷ்டியுடையது.

"It is thus seen that, in addition to the historical background, he occupies a unique position in the administration, that apart from other duties; *he is practically the sole* monarch to supervise and guide the administration in most of the religious ritualistic matters".

இம்மடத்துக் குரு பரம்பரைப்படி, தற்போதுள்ள மடாதிபதி, ஆளவந்தார் முதல் கணக்கிட்டு, 49-ஆவது பட்டமாகத் திகழ்கிறார். ஆனால் ஸ்ரீரங்கநாராயண ஜீயர் என்னும் பட்டப்பெயர் கூரநாராயண ஜீயர் எனும் 4-ஆவது பட்ட மடாதிபதியாகத் திகழ்ந்தவருக்கே பெரிய பெருமாளால் அருளப்பாடாகி, அது முதலாக நாளதுவரை இம்மடத்தை அலங்கரித்து வருபவர்கள் எல்லோருக்கும் வழங்கப் பட்டு வருகிறது.

ராமாநுஜார்ய திவ்யாக்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம் என்று பல்லாண்டு பாடி மீண்டும் திருவல்லிக்கேணி சாது கோஷ்டிக்கும் பல்லாண்டு பாடி நிற்கிறேன்.

ஸ்ரீரங்கம்
4-3-1985 ஸ்ரீரங்கநாராயண ஜீயர்

SRIVATSAM

ஸ்ரீ:
ஸ்ரீமதே வேங்கடேசாய நம:



# திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமி மடம்

ஸ்ரீமதே ராமானுஜாய நம:
ஸ்ரீமத் வரவரமுநயே நம:
ஸ்ரீவேங்கட யதீந்த்ராய நம:

ஸ்ரீமதித்யாதி விசேஷணவிசிஷ்டராய் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யராய் எழுந்தருளியிருக்கும் திருமலை திருப்பதி-பெரிய-கோவில்கேள்வி அப்பன் ஸுந்தரராமாநுஜ பெரிய ஜீயர்ஸ்வாமி அநேக மங்களாஸாசனம் செய்து, திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமி, தேவஸ்தான வேத அத்யாபக கோஷ்டி கௌரவ காரியதரிசியான ஸ்ரீ.உ.வே. ந. ச. பார்த்தஸாரதி அய்யங்கார் ஸ்வாமி ஸந்நிதியில் விண்ணப்பிப்பது. நித்யஸ்ரீ:.

SRIVATSAM

ஸ்ரீமுகம் கிடைத்தது. ஷை கோஷ்டியின் 760-ஆவது ஆண்டு விழா நினைவு மலர் ஒன்று வெளியிடப்போவதாகவும், அதில் கோயில் திருமலை பெருமாள்கோவில் முதலிய பல முக்கியமான திவ்யதேசங்களில் நடைபெறும் அத்யாபக கைங்கர்யங்களின் வைபவமும், உத்ஸவாதிகளின் விவரமும், திவ்யதேசத்தெம்பெருமான்களின் திருவுருவப்படங்களும். சிறப்பாகத் திருவல்லிக்கேணி கோஷ்டியின் திவ்யசரித்திரமும் அக்கோஷ்டியைச் சிறப்பித்த மஹநீயர்களின் பெருமையும் இடம்பெற்றிருப்பதாகவும் தெரிந்து மிகவும் சந்தோஷப்படுகிறேன். இத்தகைய மலர் இப்போதுள்ளவர்களுக்கேயல்லாமல் இனிமேல் வரும் தலைமுறையினரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் மிகவும் உபயோகப்பட்டு மேன்மேலும் ஸ்ரீவைஷ்ணவதர்மருசியை விளைவிக்குமென்று நம்புகிறேன். ஷை ஸபை நம் மதத்தைச்சேர்ந்த பலருக்கும் நன்மைபயக்கும் பல நல்ல காரியங்களைச் செய்துகொண்டு ஸ்ரீபார்த்தஸாரதியெம்பெருமான் திருவருளால் நீடூழி வாழவேண்டுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பன் திருவடியிணையில் இறைஞ்சி நிற்கிறேன். வேணும் மங்களாசாஸனம்.

ஸ்ரீவெங்கடேச
பெரிய ஜீயர் ஸ்வாமி

திருமலை
1—3—85

ஸ்ரீமதே ராமாநுஜாய நம.



# திருமலை திருப்பதி சின்னஜீயர் ஸ்வாமி மடம்

ஸன்னிதி தெரு, திருப்பதி.

திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி தேவஸ்தான அத்யாபக கோஷ்டியார் இப்போது, கோயில் திருமலை பெருமாள்கோவில் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆழ்வார்திருநகரி வானமாமலை திருக்குறுங்குடி ஸ்ரீபெரும்பூதூர் முதலான பல திவ்யதேசங்களில் நடைபெற்றுவரும் அத்யாபக கைங்கரியத்தைப்பற்றிய பெருமைகளை அந்தந்தத் திவ்யதேசங்களில் எழுந்தருளியிருக்கிற பல மஹனீயர்களைக் கொண்டு எழுதுவித்து அவற்றை அந்தந்தத் திவ்யதேசத்தெம்பெருமான்களின் திருவுருவப் படங்களுடன் ஒரு புத்தகமாக வெளியிட இருக்கிருர்களென்பதைக்கேட்டு மிகவும் மகிழ்கிறேன். இவ்வெளியீடு திவ்யப்ரபந்தத்தின் பெருமையையும் அக்கைங்கரியம் எம்பெருமான் மிகமிக உகந்ததென்னும் விஷயத்தையும் சாதாரண மக்களும் அறிந்து மகிழும்படி அமைந்துள்ளது. வெகுநாட்களாக இங்ஙனம் ஒரு புத்தகம் வெளிவர வேணுமென்று அடியேன் எண்ணியிருந்தது இன்று ஸ்ரீபார்த்தஸாரதியெம்பெருமானது திருவருளால் ஸபலமாக்கப்படுவதை நினைத்து மிகவும் ஆச்சரியமடைகிறேன். இப்பெருமான் திருவடிவாரத்தில் அத்யாபக கைங்கரியம் செய்தும் பகவத்விஷயாதி வேதாந்த க்ரந்த ப்ரவசனம் செய்தும் போந்த ஸ்ரீ. உ. வே. நியாயவேதாந்தவித்வான் ஸாது ராமாநுஜாசார்யஸ்வாமியும், ஸ்ரீ. உ. வே. வித்வான் கோபாலய்யங்கார்ஸ்வாமியும் முறையே திருமலை திருப்பதி பெரிய ஜீயர்ஸ்வாமியாகவும், வானமாமலை ஜீயர் ஸ்வாமியாகவும் ஆஸ்தானங்களை அலங்கரித்துப் பல்லாண்டுகள் திருமலையப்பனுக்கும் தெய்வநாயகப் பெருமானுக்கும் கைங்கர்யம் செய்தமையும் செய்துவருகின்றமையும் மிகவும் பிரசித்தம். இவர்கள் இப்பெருமையைப் பெற்றதற்குக் காரணம் ஸ்ரீபார்த்தஸாரதிக்குத் தொண்டுபூண்டிருந்தமையே என்பது அடியேனது துணிபு.

இந்த ஸபை மேன்மேலும் பல பல நற்பணிகளைச் செய்துகொண்டு நீடூழி விளங்கவேணுமென்று திருவேங்கடமுடையான் பூவார்கழல்களில் ப்ரார்த்திக்கிறேன்.

சுபமஸ்து

இங்ஙனம்

அப்பன் ஸ்ரீகோவிந்தராமாநுஜ சின்னஜீயர்ஸ்வாமி

திருப்பதி

7-1-85

ஸ்ரீ:

ஸ்ரீ [illegible] நம:





ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்ய உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யராய், [illegible] ஸ்ரீ [illegible] ஸ்ரீ [illegible] [illegible] [illegible] உணி கிரண வடிவ [illegible] [illegible] [illegible] ஸ்ரீ [illegible] [illegible] [illegible] ஸ்ரீ [illegible] ஸ்ரீ [illegible] [illegible] [illegible] எழுந்தருளியிருக்கும்

ஸ்ரீ வானமாமலை ராமாநுஜஜீயர்

[illegible]ர்களாயும் ஸ்ரீ [illegible]ர்களாயும் [illegible] ஸிஷ்யர்களாயுமிருக்கிற

நம்முடைய [illegible] [illegible]க்கு [illegible]ர்களாயுமிருக்கிற

நம்முடைய ஸ்ரீ உ. வே. C. பார்த்தசாரதி அய்யங்காருக்கு (ஸ்ரீனிவாசாசாரி அத்யாபகர் [illegible])

[illegible]. இவ்விடம் வானமாமலை

ல் நம்முடைய மடம் அரங்கநகரப்பன் சன்னதி [illegible] [illegible] நடந்துவருகிறது. அவிடம் உங்களுடைய [illegible] அடிக்கடி யெழுதியனுப்பிக்கொண்டிருக்க வேணும்.

இப்படிக்கு,

# திவ்ய தேசங்களும் மங்களா சாஸனமும்

ஸ்ரீய: பதியான ஸர்வேச்வரன் பரத்வம், வ்யூஹம் வபவம். அந்தர்யாமித்வம், அர்ச்சை என்று ஐந்து பிரகாரமாக எழுந்தருளியுள்ளான். அந்த எம்பெருமான் விஷயத்தில் சேதனர்கள் ஈடுபடும் கைங்கர்யங்களில் மங்களாசாஸனமே சிறந்தது. எம்பெருமானும்

மங்களாசாஸனத்தைத் திருச்செவி சாத்தி உகக்கிறுன். மங்களாசாஸனமாவது திருப்பல்லாண்டு பாடுகை. பரமபதத்திலும் நித்திய முக்தர்கள் "ஏதத்ஸாமகாயந் நாஸ்தே" என்று பாடி, அவனை உகப்பித்துத் தாங்களும் ஆனந்திக்கிறுர்கள். அப்படியே க்ஷீராப்தி நாதனையும் மங்களாசாஸனத்தாலேயே உகப்பிக்கிறுர்கள். எம்பெருமான் அவதரிக்கும்பொழுது நித்திய முக்தர்களும், "அஹ்ருத் ஸஹஜ தாஸ்யா: ஸூரயஸ் ஸ்ரஸ்த-பந்தா: விமல-சரம-தேஹா:. இத்யமீ ரங்கதாம" என்கிற ஸ்ரீஸூக்திப் படியே மனுஷ்ய, த்ரியக் ஸ்தாவரங்களாக அவதரித்து, எம்பெருமானுக்கு மங்களாசாஸனம் செய்கிறுர்கள். அர்ச்சாவதாரத்திலோ மங்களாசாஸனம் பண்ணுவதற்காகவே நித்யஸூரிகள் ஆழ்வார்களாக அவதரித்து, ஸர்வாதிகாரமான திவ்யப்ரபந்தங்களைப்பாடி, மங்களாசாஸனம் செய்து, மற்றவர்களையும் மங்களாசாஸனம் பண்ண நியமிக்கிறுர்கள்.

ஆசார்யர்கள் காலத்தில் மதுரகவிகள், நாதமுனிகள் போல்வார் நம்மாழ்வாரை உபாஸித்து அவர்வாக்காலே திவ்யப்ரபந்தங்களைப்பெற்று, அவைகளைப் பட்டோலை கொண்டு, மற்றவர்களுக்கும் உபதேசித்து, மங்களாசாஸனபரராய் ஆக்கியருளினுர்கள்.

நாதமுனிகளும் திவ்யதேசங்கள் தோறும் திருப்பல்லாண்டு மங்களாசாஸனம் நடக்கும்படி பலபேர்களை அரையர்களாக நியமித்து, இசைதாளத்துடன் மங்களாசாஸனம் பண்ணுவித்தார். எம்பெருமானுர் காலத்தில் அதுபோராது என்று எழுபத்து நான்கு சிம்மாசனுதிபதிகளை நியமித்து, ஒவ்வொரு திவ்ய தேசத்திலும் ஒவ்வொருவரை நிர்வாஹஸ்தராக்கி, ஸன்னிதி நிர்வாஹத்தோடு அநேகம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் பஞ்ச ஸம்ஸ்காராதிகளைச்செய்து, திவ்யபிரபந்தங்களை உபதேசித்து, கோஷ்டியாக எம்பெருமானுக்கு மங்களாசாஸனம் பண்ணவேணும் என்று நியமித்தருளினுர். பிற்பட்டகாலத்தில் ஸ்ரீமணவாள மாமுனிகளும் ஸ்ரீ ஒன்னுன வானமாமலை ஸ்வாமியும் ஒவ்வொருவரும் தமக்கு அஷ்டதிக்கஜங்களை நியமித்து, எம்பெருமானுடைய ஸன்னிதி நிர்வாஹத்தையும் திவ்ய ப்ரபந்த கோஷ்டி மங்களாசாஸனத்தையும் பெருக்கியருளினுர்கள். மத்தியில் அர்ச்சாவதார எம்பெருமான்கள் "கொங்குங்குடந்தையும் கோட்டியூரும் பேரும் எங்குந்திரிந்து விளையாடுமென்மகன்" என்கிறபடியே சத்ரு வ்யாஜமாக புறம்பே எழுந்தருளி, அக்காலத்தில் மங்களாசாஸனபரர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் திரும்பி எழுந்தருள வேணுமென்று பிரார்த்தித்து, அந்தந்த் திவ்யதேசங்களிலும் திருப்பல்லாண்டு, ஏழை ஏதலன், ஆழியெழ என்ற பாசுரங்களை அனுஸந்தித்துப் பிரார்த்திக்க, எம்பெருமான்களும் விரோதிகளை நிரஸனம் பண்ணி, தங்கள் தங்கள் ஸ்தானத்திற்கு எழுந்தருளினுர்கள்.

பிள்ளைலோகாசார்யரும் "உகந்தருளின நிலங்களை அனுஸந்தித்தால் ஊணும் உறக்கமுமன்றிக்கே இதுவேயாத்ரையாக நடக்கும் என்றும், மங்களாசாஸனமே ஸ்வரூபானுகுணம் என்றும்" அருளிச்செய்தார்.

பெரியாழ்வாரும் தமக்கு ஆஹாரம் "நமோநாராயணு" என்ற மங்களாசாஸனமே என்றும், உலகத்தாருடைய ஆஹாரம் தமக்கு ஆகாரமில்லை யென்றும் "உண்ணு நாள் பசியாவதொன்றில்லை", என்கிற பாசுரத்தில் அருளிச்செய்தார். அப்படியே எம்பெருமானுக்கு என் வருகிறதோ என்று பயந்து குறிப்பாகத் திருக்கண்வளரும் எம்பெரு

SRIVATSAM

மானுக்கு மங்களாசாஸனத்தோடு பர்யாப்தி பிறவாமல் ரக்ஷகமாக நித்யஸூரி களான பஞ்சாயுதாழ்வார்கள், பெரியதிருவடி, அஷ்டதிக் பாலகர்கள் யாவரையும் அழைத்து "உறகல் உறகல் உறகல்" என்ற பாசுரத்தாலே" பள்ளியறை குறிக்கொண்மின்" என்று காவலிட்டார்.

நம்மாழ்வாரும் "தொண்டீர் எல்லீரும் வாரீர்" என்று மங்களாசாஸனத்திற்கு எல்லோரையும் அழைத்தார். அப்படிப்பட்ட மங்களாசாஸன கோஷ்டி, இப்பொழுது பலதிவ்ய தேசங்களில் குறைந்து வருகிறது. ஆகிலும் திருவல்லிக்கேணியில் பார்த்த சாரதி, கோஷ்டி குறையாமல் திருவுள்ளம் பற்றிவருகிறுர். திருவல்லிக்கேணி திவ்ய தேசத்தில் எம்பெருமான் ஐந்து பிரகாரமாக ஸேவைசாதிக்கிறுர்.

திருமங்கையாழ்வாரும் பரத்வத்தை "மீனமர் பொய்கை" என்கிற பாசுரத் தாலே" கருடாரூடரான பேரருளாளனை அனுபவித்தார். "வேதத்தை வேதத்தின் சுவைப்பயனை" என்கிற பாசுரத்தாலே வியூகமான ரங்கநாதனை அனுபவித்தார். "பரத னும் தம்பி சத்ருக்னனும்" என்கிற பாசுரத்தாலே விபவமான சக்ரவர்த்தித் திருமகனை அனுபவித்தார். "பள்ளியிலோதி" என்கிற பாசுரத்தாலே அந்தர்யாமியான அழகிய சிங்கரை அனுபவித்தார். மற்றும் ஐந்து பாசுரங்களாலே அர்ச்சாவதாரமான வேங் கடகிருஷ்ணனை அனுபவித்தார். இவைகளை "திருவல்லிக்கேணிக் கண்டேனே" என்று சொல்லி அனுபவிக்கிறுர்.

அர்ச்சாவதார எம்பெருமானுடைய பரமகிருபை வாசாமகோசரம். "பொரு ளல்லாத என்னைப் பொருளாக்கி", பத்தாவது வயதில் பெரிய பெருமாள் ஸ்ரீரங்கத் திற்கு அழைத்து, திவ்ய பிரபந்தங்களை ஓதுவித்தும், மடத்தில் ஆசார்ய கைங்கர் யத்தை நியமித்தும்; தம் திருவடிவாரத்தில் 20 வருடங்கள் திருப்பல்லாண்டு பாடும் கைங்கர்யத்தில் நியமித்தும் ஆட்கொண்டு, ஸ்ரீ பார்த்தஸாரதியினுடைய திரு வடிவாரத்திற்கு அனுப்பியருளினுர். ஸ்ரீ பார்த்தஸாரதியும், தன்னுடைய பார்வைக்கு விஷயமான மடத்தில் அரங்கநகரப்பன் கைங்கர்யத்தையும் மங்களாசாஸனபரர் களான அத்யாபகர்களுடைய கோஷ்டியிலே அன்வயிப்பித்தும், 30 வருடங்கள் அடிமைகொண்டு, விசேஷ கடாக்ஷம் செய்தருளி அங்கு நின்றும், வானவர் கொழுந்தான ஸ்ரீ வானமாமலை எம்பெருமான் கைங்கர்யத்திற்கு அனுப்பியருளினுர். வானமாமலை எம்பெருமானும் "பொருளல்லாத என்னைப் பொருளாக்கி", ஆசார்ய ஸ்தானத்தில் நிய மித்துத் தம்முடைய நிர்வாஹத்தையும் கிருபை பண்ணி யருளினுர்.

அப்படியே ஸாது ராமானுஜாசாரியர் என்பவர், ஸ்ரீ பார்த்தஸாரதியின் திரு வடியில் மங்களாசாஸனபரராய், எழுந்தருளியிருந்தவர். அவரையும் விசேஷமாக கடாக்ஷித்து, திருவேங்கடமுடையான் திருவடியில் மங்களாசாஸனபரராக்கி அருளி னுர். இதுபோல ஸ்ரீபார்த்தஸாரதியினுடைய க்ருபா ப்ரபாவம் அபரிமிதம். மேலும் மேலும் திவ்யதேசங்களில் மங்களாசாஸனம் விசேஷமாக நடக்க அருளவேணுமென்று எம்பெருமானையே பிரார்த்திப்போம்.

ஸ்ரீ வைஷ்ணவர்களான ஒவ்வொருவரும் ஸன்னிதியில் கோஷ்டியில் அன்வயிக்க முடியாதவர்கள் தாங்கள் தங்கள் ',கனிவார் வீட்டின்பம்" என்கிறபடியே கிருஹார்ச்

சன எம்பெருமானை ஆராதித்து, திருப்பல்லாண்டு, கண்ணிநுண்சிறுத்தாம்பு, திருப்பாவை இவைகளையாவது ஸேவித்து, சாத்து முறை காலத்தில், திருப்பல்லாண்டு,

''ஸர்வதேச தசாகாலேஷ்வ அவ்யாஹத பராக்ரமா ।
ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞாவர்த்ததாம் அபிவர்த்ததாம் ॥
ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா ப்ரதிவாஸர முஜ்ஜ்வலா ।
திகந்தவ்யாபிநீ பூயாத்ஸா ஹிலோக ஹிதைஷிணீ ॥
ஸ்ரீமந் ஸ்ரீரங்க ச்ரியமநுபத்ரவாம் அநுதிநம் ஸம்வர்த்தய ।
ஸ்ரீமந் ஸ்ரீரங்க ச்ரியமநுபத்ரவாம் அநுதிநம் ஸம்வர்த்தய ॥

என்று ஸேவித்து எம்பெருமானைக் குறித்து, உகந்தருளின நிலங்களுக்கும் எம்பெருமானார் தரிசனத்திற்கும் மங்களாசாஸனபரர்களாயுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் ஒரு குறைவில்லாமல் மங்களகரமாக கடாக்ஷித்தருளவேணுமென்று எம்பெருமானைப் பிரார்த்திக்கிறோம்.

''ஒக்கத் தொழுகிற்றிராகில் கலியுகமொன்று மில்லையே'' என்று எல்லோரும்கூடிப் பிரார்த்திப்பது மிக விசேஷம்.



வானமாமலை,
1—2—1985.

ஸ்ரீராமாநுஜன்

சுபமஸ்து.

ஸ்ரீ அஹோபில மடம், ஸ்ரீரங்கம்.

ஸ்ரீமதே லக்ஷ்மீந்ருஸிம்ஹபரப்ரஹ்மணே நம:



# மங்களா சாஸன ஸ்ரீமுகம்


SRIVATSAM

ஸ்ரீய: பதியான எம்பெருமான் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும், ஆழ்வார்களின் பாடல் பெற்ற ஸ்தலங்கள் திவ்ய தேசங்களாகும். இத்திவ்ய தேசங்களுக்குச் சிறப்புரைக்கவந்த ஆழ்வார்கள் "வேதம் வல்லவர்களும், வேள்வி செய்பவர்களும் நிறைந்திருப்பன திவ்யதேசங்கள்" எனத்தான் பெருமை உரைக்கிறார்கள், பாஞ்சராத்ராதி ஆகமங்கள், எம்பெருமானின் ஆராதநங்களுக்கும், உத்ஸவங்களுக்கும் அங்கமாக வேதம் பாராயணம் செய்யப்படவேணுமெனக் கூறுகின்றன.

அதையடியொற்றிப் பற்பல வருடங்களாக ஸந்நிதிகளில், ஆஸ்தாநஸமயத்தில்நின்றும் உட்கார்ந்தும், திருவீதிப் புறப்பாடுகளில் எம்பெருமானின் பின்னும் வேதபாராயணங்கள் ஆழ்வார்களின் காலங்களிலேயே, அவர்களால் அநுபவிக்கப்பட்டிருப்பதை அவர்களின் பாசுரங்களிலிருந்து காணலாகிறது.

"தநுர்மாதத்தில் வைகுண்ட ஏகாதசியினன்று தொடங்கிப் பத்துநாள்கள் எம்பெருமான் ஸந்நிதியில் வேதங்கள் பாராயணம் பண்ணப்படவேணும்" என்றும் 'அதற்காக விசேஷமாக உத்ஸவம் பண்ணவேணும்' என்றும் பாஞ்சராத்ரம் கூறுகிறது. ஸ்ரீரங்கம் முதல் பல திவ்ய தேசங்களிலும் இன்றைக்கும் அது நடந்தே வருகிறது.

திருமங்கையாழ்வார் காலந்தொடங்கித் திருவாய்மொழி ஆயிரமும், நாதமுனிகள் காலந்தொடங்கி நாலாயிர திவ்ய ப்ரபந்தங்களும் பெரிய பெருமாளின் நியமனம்பெற்று வேதங்களுடன் ஸமமாக்கப்பட்டன. பாஷ்யகாரர் காலத்திலிருந்து இவ்வுபயவேத பாராயணங்களும் திவ்ய தேசங்களில் உத்ஸவாங்கமாகச் சிறப்படைந்தன. அன்றுதொட்டு இன்றுவரை அந்தந்தத் திவ்யதேசத்திலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் இவ்வுபயவேதபாராயண கைங்கர்யத்தை, எத்தனை இடையூறு ஏற்படினும் அதனைப் பாராட்டாது பகவத்ப்ரீதியேப்ரயோஜநமாய்ச் செய்தே வருகிறார்கள்.

இவை எம்பெருமான் உகந்த கைங்கர்யங்களில் மிகச் சிறந்தவையாகும். பல திவ்யதேசங்களிலும், இவ்வுபயவேத பாராயண மிராசுபெற்றவர்கள் தனித்தனியாக உள்ளனர்.

அப்படியல்லாமல் இந்தத் திருவல்லிக்கேணி பார்த்தஸாரதி ஸந்நிதி வேத அத்யாபககோஷ்டி "இரண்டுவேதங்களையும் கற்று இரண்டிலும் மிராசு உற்றதாய் நெடுநாள்வழக்கப்படி பாராயணம் செய்யும் கைங்கர்யத்தை எத்தனையோ இடையூறு ஏற்பட்டும் நடத்திவந்திருக்கிறது" என்பதனைக் கேட்கும்போது மிக்க மகிழ்வுண்டாகிறது. இதற்காகவே திருவல்லிக்கேணி அத்யாபக ஸ்வாமிகள் உபயவேதங்களையும் கற்றுத் தேர்ந்திருந்தார்கள் எனவும் தெரிகிறது. பற்பல திவ்யதேசங்களில் ஸம்பாவனை கொடுத்தே அத்யாபக வேதபாராயண ஸ்வாமிகளை ஏற்படுத்தநேர்ந்த இக்காலத்திலும் இந்தக் கோஷ்டி அநந்யப்ரயோஜனமாய் பார்த்தஸாரதி ஸந்நிதியில் திவ்யப்ரபந்த வேதபாராயண கைங்கர்யத்தை நிர்வஹித்து வருவது மிகச் சிறந்ததொன்று.

இந்தக் கோஷ்டி இவ்வண்ணமே அநந்யப்ரயோஜநமாய் வேத அத்யாபக கைங்கர்யங்களை நடத்திவரக் கடாக்ஷிக்குமாறு ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹனை ப்ரார்த்தித்துக்கொண்டு கோஷ்டிக்கு மங்களாசாஸனம் பண்ணுகிறேன்.

ஸ்ரீரங்கம்
14-3-85

ஸ்ரீசடகோபஸ்ரீ:
சுபமஸ்து

SRIVATSAM

ஸ்ரீ மதே ராமாநுஜாயநம :
ஸ்ரீமத் வரவரமுநயே நம :
ஸ்ரீகுருங்கமுநயே நம :



# திரு ஜீயர்மடம் திருக்குறுங்குடி


SRIVAISHNAVAM

ஸ்ரீமத் பராங்குச பரிவ்ராஜகாசார்ய இத்யாதி ஸ்ரீ பேரருளாள ராமாநுஜஜீயர் ஸ்வாமி மடாதிபதி - திரு ஜீயர்மடம் - திருக்குறுங்குடி.

திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸந்நிதி அத்யாபக கோஷ்டிக்கு மங்களாசாஸநம்.

ஸ்ரீ ஸ்வாமி தேசிகன் யதிராஜஸப்ததியில் ''யதிக்ஷமாப்ருத் த்ருஷ்டம்'' என்று ஸாதித்த ச்லோகத்திலும், காளிதாஸன் ''புராணமித்யேவ'' என்ற ச்லோகத்திலும் ''உபாதேயத்துக்கு ப்ராசீநம் காரணமன்று, பரித்யாகத்துக்கு நவீனம் காரணமன்று, குணமுள்ளது உபாதேயம், குணமற்றது த்யாஜ்யம்'' என்பதிலும் வந்துள்ளபடி நம் தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தில், அருளிச்செயல் கோஷ்டி ஆரம்பிக்கும்போது அநேக திவ்யதேசங்களில், ஸ்ரீ நம்பெருமாளாலே ஸாதிக்கப்பட்ட ''ஸ்ரீசைலேசதயாபாத்ரம்'' என்ற தனியனும், ''லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்'' என்ற தனியனும், சாற்றுமறையில் ''ஸர்வதேச'', ''ஸ்ரீசைலேசதயாபாத்ரம்'' தனியன், ''வாழி திருவாய்மொழிப்பிள்ளை.... மணவாளமாமுனியே இன்னுமொரு நூற்றாண்டிரும்'' இவை சேவிக்கிறார்கள்.

கம்பநாட்டாழ்வார் சடகோபரந்தாதி "அந்தமிலா மறையாயிரத்து" என்ற பாட்டில் சொல்லியபடி, ஸ்ரீவைஷ்ணவர்கள் கூடி அருளிச்செயல் கோஷ்டி நடத்தாதிருந்தால் ஸந்நிதிகளில் நித்ய நைமித்திக உத்ஸவங்களும் ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயும் யாதாயிருக்கும் ?

ஸ்ரீ பார்த்தஸாரதி கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் திவ்யதேசமான திருவல்லிக்கேணி ஸந்நிதியில் நித்ய நைமித்திக உத்ஸவங்களில் ஸ்ரீவைஷ்ணவர்கள் கூடிய அருளிச்செயலின் கோஷ்டியானது உலகம் போற்றும் நிலைமையில் உள்ளது என்பது ப்ரஸித்தம்.

இவ்விதம் ப்ரஸித்தமான திவ்யதேசத்திலிருந்து எல்லா திவ்ய தேசங்களிலுமுள்ள அருளிச்செயல் கோஷ்டிகளும் மற்றை விஷயங்களுங் கண்டு ஒரு மலர் வெளியிடுவதென்பது ஸ்ரீவைஷ்ணவர்கள் உகந்து குதுகலிக்கத்தக்கது.

வழுவிலா அடிமை செய்யும் ஸ்ரீவைஷ்ணவ குழாங்களின் அருளிச்செயல் கோஷ்டியை ஸ்ரீ பார்த்தஸாரதி அநுபவிப்பதுபோலே, எல்லாத் தென்னாசார்ய திவ்ய தேசத்து எம்பெருமான்களும் உகந்து அநுபவித்து இன்புறவேணும். திருவல்லிக்கேணியில் அருளிச்செயல் கோஷ்டி மேன்மேலும் ஒப்பவரில்லா ஸ்ரீவைஷ்ணவர்களால் மலரவேணும்.

SRIVATSAM

அருளிச்செயலுக்கே முதல் ஸ்தானம் வகித்த ஸ்ரீவைஷ்ணவ நம்பியின் திருவடிகளிலும், குருகூர் நம்பியான ஸ்ரீ ஸ்வாமி ஆழ்வார் தேனே மலருந்திருவடிகளிலும், சீரார் சடகோபன் தமிழ்வேதம் தரிக்கவந்த ஏரார் பெரும்பூதூர் இளையாழ்வார் கழல் பாடும் வரவரமுனிவன் திருவடிகளிலும் ப்ரார்த்திக்கிறோம்.

வர்த்ததாமபிவர்த்ததாம்.

திரு ஜீயர்மடம்
திருக்குறுங்குடி
21—12—84

ஸ்ரீராமாநுஜன்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தசாரதிஸ்வாமி தேவஸ்தான வேதாத்யாபக கோஷ்டியின்

763—ஆம் ஆண்டு விழாவிற்கு

## ஒரு மங்களாசாஸனம்

"க்ருஷ்ணாய வாஸுதேவாய தேவகீ நந்தனாயச
நந்தகோப குமாராய கோவிந்தாய நமோநம:"

ப்ராஹ்மணானாம் தநம் வேத: என்று பாரித்துள்ள ருக் யஜுர் ஸாம அதவர்ண வேதங்களையும் அவைகளைத் தமிழ்ப்படுத்திய அருளிச்செயல் என்கிற ஆழ்வார்களின் அமுதமொழிகளான நாலாயிர திவ்யபிரபந்தங்களையும் இடவலக்கண்களாக — எம்பெருமானார் தரிசனத்துக்கு உபயவேதாந்தங்களாக — குலாவப்பட்டு வருவது ஸ்ரீ வைஷ்ணவ உலகம் நன்கறியும்.


SRIVATSAM

தற்காலத்தில் எல்லா ஸ்ரீவைஷ்ணவ ஸ்தலங்களுக்குக் கேந்த்ரமாய் ஸ்ரீ கீதாசார்யனை ஸ்தலாதிகாரியாய்க்கொண்டுள்ள திருவல்லிக்கேணியில் எம்பெருமானார் ஸ்தாபித்த பரம்பரையில் வந்த உபய வேதாதிகாரிகள் உபயவேதங்களை பரிஷ்காரமாகப் பரிபாலித்து வருவது குறிப்பிடத்தக்கதாகும். குறிப்பாக, அருளிச்செயலை விஸ்தரித்து அத்யயனம் செய்துவைக்கும் ஸ்வாமிகளின் சைலிகள் பரம கம்பீரமானவையும் போற்றத்தக்கவையும் ஆகும். பண்டைக்காலத்திலும் சிறந்த வித்யாபீடமாகவிருந்தது திருவல்லிக்கேணி. அதன் வாசிகளுக்கு இந்த வைபவமிக்க கைங்கர்யம் ஜந்மஸித்தியென்னவேணும்.

இதற்குச் சான்றாக ஸ்ரீ. உ. வே. ந. ச. பார்த்தசாரதியைக் காரியதரிசியாகக் கொண்ட திருவல்லிக்கேணி ஷி வேதாத்யாபக கோஷ்டி ஜம்பூத்வீபத்தில் சுடர் விளக்காகச் செயல்பட்டு வருவது மஹா உன்னதமாகும். குறிப்பாக, அங்குள்ள

அருளிச்செயல் வல்லவர்கள் அருளிச்செயலைப் பண்டைக்காலம் முதல் யுவர்களுக்கும் உத்யோகாத் விச்ராந்திபெற்ற வயதினர்களுக்கும் ஓதுவிக்கும் தொண்டு எதிர்காலத்தில் சுபிக்ஷத்தை வளர்த்து, தமிழை மேலும் மெருகிடச் செய்யுமென்பதில் அத்யுக்தியோ அதிசயோக்தியோ இடம் பெறுது.

எம்பெருமானுர் வழியில் "பல்லாண்டென்று பவித்திரனைப் பரமேட்டியை"ப் பாடி 'நாராயணனே நமக்கே பறைதருவான்' என யுவர்களை ஊக்குவித்துப் பல கிளைகளை ஏற்படச்செய்து அக்கிளைகள் மேலும் பரவி வட தென்மொழிவேதங்களைக் காக்கும் கருவூலமாக அமையவேணும்.

இத்தகைய கருவூலங்களின் மூலம் விழாக்களை நடத்தி உலகோர் அறியச் செய்து வரும் ஷி கோஷ்டி ஓர் அரியபெரிய தொண்டினை மேற்கொண்டு செய்துவருவது "லோகாஸ்ஸமஸ்தா: ஸுகிநோ பவந்து" என்று கொண்டாடுவதற்குத்தக்கதாகும். இப்படிப்பட்ட சீரிய தொண்டுபூண்டு அமுதமுண்ணும் வல்லவர்கள் பெருகி, திருவல்லிக்கேணி தன் நிலையை மேன்மேலும் தேசுடனும் வீறுடனும் எய்தி, பொலிக பொலிக பொலிக' என்று வாழ்த்தி, என்றும் செயல்புரிய ஸ்ரீபெரும்பூதூர் மாமுனிவனின் திருவடிவாரத்திலிருந்து மந்த்ராக்ஷதையுடன் அநுக்ரஹித்து ஆஸாஸிக்கிறேன்.

நித்யஸ்ரீ: நித்யமங்களம்

SRIVATSAM

" ஸ்ரீமந் மஹாபூதபுரே ஸ்ரீமத்கேசவ யஜ்வந:
காந்திமத்யாம் ப்ரஸூதாய யதிராஜாய மங்களம்"

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீவரதயதிராஜ ஜீயர் மடாதிபதி
ஸ்ரீயதிராஜ ஜீயர் மடம்
மதபரிபாலன தர்மகர்த்தா
ஸ்ரீ ஆதிகேசவப்பெருமாள்
ஸ்ரீ பாஷ்யகாரஸ்வாமி ஸந்நிதி
ஸ்ரீ பெரும்பூதூர்.
31-12-84



ஸ்ரீரங்க நாயிகா ஸமேத ஸ்ரீரங்கநாத பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீரங்கநாத திவ்யமணி பாதுகாப்யாம் நம: ||



ஸ்ரீரங்கம் ஸ்ரீமதாண்டவன் ஸ்ரீவேதாந்த ராமானுஜ மஹாதேசிகன் அனுக்ரஹித்த மங்களாசாசன

# ஸ்ரீ முகம்

அந்தமிலாப் பேரின்ப மருந்தவேற்கும்
அடியோமை அறிவுடனே என்றும் காத்து
முந்தைவினை நிரைவழியி லொழுகா தெம்மை
முன்னிலையாம் தேசிகர்தம் முன்னே சேர்த்து
மந்திரமும் மந்திரத்தின் வழியும் காட்டி
வழிப்படுத்தி வானேற்றி அடிமை கொள்ளத்
தந்தையென நின்ற தனித்திருமால் தாளில்
தலைவைத்தோம் சடகோபனருளினாலே.

SRIVATSAM

திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமி தேவஸ்தானம் வேத அத்யாபக கோஷ்டி பல்லாண்டு பல்லாண்டுகள் மேன்மேலும் விளங்கவேண்டும் என்று மங்களாசாசனம் பண்ணுகிறோம். ஷை வேத திவ்யப்ரபந்த கோஷ்டி 760 வருஷங்களாகக் குறைவின்றி நடந்துவருவது கேட்டு மிகவும் சந்தோஷிக்கிறோம்.

வேதம் அநாதியானது. ஒருவராலும் செய்யப்பட்டதல்ல. இதிஹாசங்கள் புராணங்கள் போல ரிஷிகளால் செய்யப்பட்டதல்ல. ரகுவம்சம் முதலிய காவியங்கள் போல் கவிகளால் இயற்றப்பட்டதுமல்ல. "அபௌருஷேயம்'' என்று சொல்லப்படுகிறது. ஒரு புருஷனால் செய்யப்பட்டிருந்தால் அப்புருஷனிடமுள்ள தோஷங்களால் அவன் இயற்றிய நூல்களிலும் தோஷங்கள் காணும்படியிருக்கும். ஸ்ரிய:பதியான நாராயணனும் வேதங்களைச் செய்யவில்லை. ஒவ்வொரு கல்பத்தின் ஆரம்பத்தில் வேதத்தின் ஆநுபூர்வியை மறவாமல் வைத்துக்கொண்டு பிரமனுக்கு உபதேசிக்கிறான். "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோவை வேதாம்ச ப்ரஹிணோதி தஸ்மை'' என்பது பிரமாணம். தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்கிற நான்கு புருஷார்த்தங்களையும் அடைவதற்கு ஸாதனங்கள் வேதத்தினால்தான் அறிய முடியும். எம்பெருமானையும் வேதத்தைக் கொண்டுதான் அறிய முடியும். வேதத்தைக் காட்டிலும் வேறு உயர்ந்த சாஸ்திரமில்லை. 'வேதாத் சாஸ்ரம் பரம் நாஸ்தி'' என்பது, காண்க.

வேதங்கள் கர்மபாகம், ப்ரஹ்மபாகம் என்று பிரிவுடையது. கர்மபாகம் பகவானுடைய ஆராதனங்களான கர்மாக்களைச் சொல்லும். பிரஹ்மபாகம் பகவானுடைய ஸ்வரூப ரூபகுண விபூதிகளைச் சொல்லும்.

ஆகவே முழு வேதங்களாலும் பகவான் ப்ரதிபாதிக்கப்படுகிறான். "வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" என்று கீதாசார்யன் வார்த்தை. எந்த லோகங்களில் எங்கெங்கே வேதங்களிருந்தாலும் அவையெல்லாம் ஸ்ரீமந்நாராயணனுடைய குணங்களையே பேசுகின்றன. "ஓதுவாரோத்தெல்லாம் எவ்வுலகத் தெவ்வெவையும் சாதுவாய் நின்புகழின் தகையல்லால் பிறிதில்லை" என்று நம்மாழ்வார் ஸ்ரீஸூக்தி, இந்த வேதங்களை அநுஸந்திப்பவர்களை "இருக்கார் மொழியால் நெறியிழுக்காமை உலகளந்த திருத்தாளிணை நிலத்தேவர் வணங்குவர்" என்று நம்மாழ்வார் புகழ்ந்து பேசுகிறார்.

திவ்யப்ரபந்தங்களின் பெருமையோ அளவற்றது. வ்யாசர், வால்மீகி, யாக்ஞவல்க்யர் முதலான மஹரிஷிகளின் ஸூக்திகள் கூட ஆழ்வார்கள் அருளிச்செயலுக்கு இணையாகாது. "மாசில் மனம் தெளி முனிவர் வகுத்தவெல்லாம் மாலுகந்த ஆசிரியர் வார்த்தைக்கொவ்வா" என்கிறார் ஆசார்யன். "பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவும்" என்றும் "தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்", "பொய்யில் பாடல்", "முந்தை ஆயிரம்" என்றும் "பாட்டாய தமிழ்மாலை ஆயிரத்துளிவை பத்தும் கேட்டு ஆரார்வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே" என்றும் "இன்கவியென்றும்", "ஈரச்சொற்கள்" என்றும் பலபடி பேசப்பட்ட பெருமைவாய்ந்தவை திவ்யப்ரபந்தங்கள். எம்பெருமானுக்கும் செந்தமிழ் பாடுவார் தாம் வணங்கும் தேவனாயிருந்தால் ஒரு தனிப்பெருமை. ஸம்ஸ்க்ருத வேதத்திற்கு "ப்ரஹ்மம்" என்று பெயருண்டு. அதே பெயரைத் தமிழ் வேதத்திற்கும் வைத்துப் பேசுகிறார்கள் பெரியோர்கள். "ஆம்நாயாநாம் ப்ரக்ருதிமபராம் ஸம்ஹிதாம் த்ரஷ்டவந்தம்", "த்ராவிட ப்ரஹ்மதர்சீ, த்ரமிடோப நிஷந்நிவேச, ப்ராசீனனும் ச்ருதிபரிஷதாம் பாதுகே பூர்வகஸ்யா" என்பவை காண்க. திவ்யப்ரபந்தங்கள் ஸர்வேச்வரனே தப்புதலின்றித் தனைக் கவிபாடியவைகளன்றோ? திவ்யப்ரபந்தம் அறிந்தாலன்றோ ஸ்ரீவைஷ்ணவனாவது. "அறியக் கற்றுவல்லார் வைட்டணவர் ஆழ்கடல் ஞாலத்துள்ளே" என்கிறார் நம்மாழ்வார். "நண்ணாவசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்த, எண்ணாதனகளெண்ணும் நன் முனிவரின்பம் தலைசிறப்ப, பண்ணார் பாடலின் கவிகள்" என்றல்லவோ இதன் பெருமை. பரதேவதா பாரமார்த்திய ஞானமுள்ள பராசரருடைய ஸ்ரீஸூக்தியான விஷ்ணுபுராணத்தைக்காட்டிலும் பரதத்வத்தைத் தெளிவாகப் பேசும் கிரந்தங்கள் திவ்யப்ரபந்தங்களே. ஸர்வேச்வரனைச் சீக்கிரம் ஸந்தோஷப்படுத்தி அநுக்ரஹம் பண்ணும்படி செய்யும் ப்ரபந்தம் திவ்யப்ரபந்தங்களே. இப்படி பெருமைவாய்ந்த வேத திவ்யப்ரபந்தங்களை 760 வருஷங்களாக அநுஸந்திக்கும் கோஷ்டி என்று கேட்டவாறே அம்ருதக் கடலில் மூழ்கினாப்போலிருக்கிறது. இம்மாதிரி ஆழ்வார் திருநகரி, வானமாமலை, திருக்குறுங்குடி, ஸ்ரீவில்லிபுத்தூர் முதலிய திவ்யதேசங்களில் கோஷ்டிகள் நடந்து வருவது வியக்கத்தக்கவிஷயமே. ஆழ்வார் திருநகரியில் ஒவ்வொரு மாதத்தில் நாலாயிரம் ஸேவை நடக்கிறது. திருவரங்கம் பெரிய கோயிலில் நாதமுனிகள் காலம் தொடங்கியே அவிச்சின்னமாக திவ்ய ப்ரபந்த கோஷ்டி நடந்துவருகிறது. வீரநாராயணபுரத்தில் அவதரித்த ஸ்ரீமந்நாதமுனிகள் திருக்குடந்தைக்கு எழுந்தருளி ஆராவமுதனை மங்களாசாசனம் செய்தார். அப்போது அங்கு அத்யாபகர்கள் "ஆராவமுதே" என்கிற திருவாய்மொழியை விண்ணப்பம் செய்துகொண்டிருந்தார்கள். ஸ்ரீமந்நாதமுனிகள் திருச்செவி சாத்தினார். "ஓராயிரத்துளிப்பத்தும்" என்பதைக்கேட்டு, "ஆயிரம் பாசுரமும் உங்களுக்கு வருமோ" என்று வினவ;

SRIVATSAM

"எங்களுக்கு வராது. ஆழ்வார் திருநகரியில் போய்க் கேட்டால் தெரியலாம்' என்று சொல்ல நாதமுனிகள் ஆழ்வார் திருநகரி எழுந்தருளி அங்கு "கண்ணிநுண் சிறுத்தாம்பு" பிரபந்தத்தை உபதேசம் பெற்று ஜபம்பண்ணி நம்மாழ்வாரை யோகதசையில் ஸாக்ஷாத்காரம்பண்ணி, நாலாயிரப்ரபந்தத்தையும் கேட்டுப் பட்டோலை பண்ணிக்கொண்டுவந்து ஊர் திரும்பி தனது மருமகன்களுக்குத் தாளத்துடன் அத்யயனம் செய்துவைத்து, திருவரங்கத் திருப்பதியில் அத்யயனோத்ஸவம் நடத்தி வைத்தார். திருக்குடந்தைக்கு எழுந்தருளி நம்மாழ்வாரை அர்ச்சையாக ப்ரதிஷ்டை செய்து மார்கழி மாதத்தில் சூர்யமான க்ரமத்தில் திருவத்யயனோத்ஸவம் வைத்தார். ஆராவமுதனுக்கு "த்ராவிட ச்ருதி தர்சகர்" என்று திருநாமம் சாத்தினர். அதுமுதல் திருக்குடந்தையிலும் திவ்யப்ரபந்த கோஷ்டி அவிச்சின்னமாக நடந்துவருகிறது. நிற்க; திருவல்லிக்கேணியில் உபயவேத கோஷ்டிகளும் மேன்மேலும் வளர்ந்து நூற்றுக்கணக்கான ஸ்வாமிகள் கோஷ்டியில் ஸேவை ஸாதிக்கும்படி நம்பெருமாளும் ஸ்ரீரங்கநாச்சியாரும் அனுக்ரஹிக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறோம்.

ஸ்ரீரங்கநாத திவ்யமணி பாதுகா ஸ்ம்ருதி:



ஸ்ரீமதே நாராயணாய நம :



ஸ்ரீமத் த்ரிதண்டி சின்ன ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி
அனுக்ரஹித்த

# மங்களா சாசனம்

திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதி ஸ்வாமி தேவஸ்தான வேத அத்யாபக கோஷ்டியின் 760 வார்ஷிக மஹோத்ஸவம் நடைபெறுவதைப்பற்றிச் சந்தோஷப் படுகிறோம்.

SRIVATSAM

இந்தக் கோஷ்டி வேத அத்யாபக கைங்கர்யத்தை வர்த்ததாம் அபிவர்த்ததாம் என்ற முறையில் நடத்திவரவேணும் என்று கீதாசார்யனிடம் ப்ரார்த்தித்து மங்களா சாசனம் செய்கிறோம்.

உத்ஸவத்தின் நினைவு மலரில் கோஷ்டியின் திவ்ய சரித்திரங்களும், கோயில், திருமலை, பெருமாள் கோவில், திருநாராயணபுரம், ஸ்ரீவில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி வானமாமலை, திருக்குறுங்குடி, ஸ்ரீபெரும்பூதூர் போன்ற சன்னிதிகளின் கைங்கர்ய வைபவங்கள் உத்ஸவ விபரங்கள், திவ்யதேச சரித்திரங்கள் முதலியன வெளியிடுவதன் மூலம் திவ்யதேச பொக்கிஷம் அனைவருக்கும் கிடைக்கும்படி செய்வதைக் கேட்டு ஆனந்தித்து மங்களாசாசனம் செய்கிறோம்.

அனேக மங்களாசாசனம்.

சீதாநகரம்,
522 515,
A. P.

சின்ன ஸ்ரீ ரா. ஜீயர்

8. ஸ்ரீ உ. வே. P. A. பார்த்தஸாரதி ஐயங்கார்: [1923—1948] இவரும் மேற்குறித்த புதுப்பாக்கம் ஸ்வாமியைப் போலே லௌகிக உத்தியோகத்தில் (D. A. G. P. & T. ஆபீஸ்) அமர்ந்திருந்தும் கோஷ்டி கைங்கர்யத்தில் பெருக்கம் காட்டி அந்வயித்தவர். 25 வருடம் கைங்கர்யம் செய்து பழுத்தவர்.

9. ஸ்ரீ உ. வே. V. A. கோபாலய்யங்கார் ஸ்வாமி: (1937—1970), வர்த்தமான வானமாமலை ஜீயராய்த் திகழ்பவர். பூர்வாச்ரமத்தில் "மடம் கோபாலய்யங்கார்" என்று ப்ரசித்தி பெற்றவர். ஆழ்வார் அருளிச்செயல்களில் அபரிமிதமான பரிவு. பூர்வாசார்ய க்ரந்தங்களில் சிறந்த பாண்டித்யம். அத்யாபக கோஷ்டியில் முன்னணியில் முன்னின்று தலைமை வகித்தது போல இன்று வைணவத்திற்கே காப்பாளராகத் தலைமையேற்று வானமாமலையினின்று ஞானவொளி பரப்பி வருகிறார். சமீபத்தில் பதரிகாச்ரமம் வரையில் திக்விஜயம் செய்து வைணவ சித்தாந்தத்தின் கொடியைப் பறக்கவிட்டு வந்தவர். சிவரமங்கலத்தவர் கைதொழ உறைபவராகிய இவர் 33 ஆண்டுகள் அத்யாபக கோஷ்டி கைங்கர்யஞ்செய்து ஸ்ரீபார்த்தசாரதிக்கும் ஏனைய பெருமான்களுக்கும் உகப்பு ஈந்தவர். இவரால் இக்கைங்கர்யம் வீறுபெற்றது, சென்னை வைணவ சங்கத்தில் இவரைத் தெரியாதவர் இல்லை. அவ்வளவு சௌலப்யர். காட்சிக்கெளியவர். கடுஞ்சொல்லர் அல்லர். ஸ்ரீவைஷ்ணவநிதி. இவர் வானமாமலை மடத்துக் காப்பாளராக இருந்தபோது நிகழ்த்திவைத்த சொற்பொழிவுகளும், உற்சவங்களும், காலக்ஷேபங்களும் மிகவும் பயனுள்ளவையாயிருந்தன. பார்த்தஸாரதி இவரை வானமாமலைக்கு அனுப்பியது இராமானுஜரைத் தேவாதி தேவன் திருவரங்கத்திற்கு அனுப்பியதை ஞாபகமூட்டுகிறது.

10. ஸ்ரீ உ. வே. T. A. வரதாசாரியார்: [1930—1959]. இவர் T A V என்று ப்ரசித்தர். கடைசி ஐந்து வருட காலம் தர்மகர்த்தாவாகவும் இருந்தார். 29 வருட காலம் பார்த்தன் தேர் முன் நின்றானுக்கு உனக்கே நாமாட் செய்வோம் என்ற கணக்கிலே தொண்டுக்கே கோலம் பூண்டவர். நெற்றியிலே பளிச்சென்று ஒளிவிடும் திருமண் காப்புடன் கம்பீரமான தோற்றம். தேசூர் ஸ்வாமி போல் வாக்கும் திவ்யப்ரபந்தத்தின் ஏற்றத்தை விளக்கிப் பகவத்கைங்கர்யத்தில் ஈடுபடுத்தியவர். லௌகிக உத்யோகத்தைத் திறம்பட வகித்தவர். ஜட்கா வண்டியில் தான் ஆபீஸ் போய்வருவர்.

11. குவளை அனந்தாசாரியர்: [1930—1949]. இவர் காத்திரமான தோற்றம் படைத்தவர். போஸ்ட் ஆபீஸில் உத்தியோகம். இந்த அத்யாபக கைங்கர்யத்தில் பெருக்கம் காட்டியவர். அளவோடு பேசுபவர். பத்தொன்பதாண்டு சேவை புரிந்ததுடன் பல சிறுவர்களுக்குக் கற்பித்துத் திருத்திப் பணிகொண்டவர்.

12. ஸ்ரீ உ. வே. V. K. ராமானுஜாசாரியர்: [1923—1959]. இவர் பரம வைதிகர்: சுத்தர்: விக்ரக ஆராதனை விடாது செய்துவந்தவர். ஆகவே நீர் பல கால் மூழ்குபவர். ஹிந்து உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியராகப் பணிபுரிந்தவர். மாணவர் இவரிடம் மரியாதையோடு நடந்துகொள்வர். பள்ளிக்கூட வாத்தியார்களின் ஓட்டப் பந்தயத்தில் கடைசி வருஷம் வரை இவரை வென்றவர் எவருமிலர். வீடு வந்தவுடன் ஸ்நானம் செய்து மடியுடை தரித்துக் கோஷ்டி கைங்கர்யத்துக்கு விரையும் சிறு மாமனிசர். 36 ஆண்டுகள் கோஷ்டி கைங்கர்யத்தில் அன்வயித்த நற்குணசிலர்.

13. ஸ்ரீ உ. வே. T. A. ரங்காசாரியர்: [1923—1982]. புரிசை திருமலை அனந்தான் பிள்ளை ரங்காசாரியர் என்று ப்ரசித்தர். 59 ஆண்டுகள் கோஷ்டியில் அன்வயித்துச் சென்ற ஆண்டு அந்தமிலின்பத்தழிவில் வீடு புகுந்தவர். உத்தியோகஸ்தர். சிறந்த அத்யாபகராய்க் கோஷ்டியை நிர்வகித்து

SRIVATSAM

வந்தார். ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தில் தெளிந்த ஞானமுடையவர். ஆழ்வார் ஆசார்யர்கள் ஸ்ரீ ஸூக்தியில் ஆழங்காற் பட்டவர். இவருடைய நெடுங்காலத் தொண்டை எண்ணும்போது இந்த சம்பத்து எல்லோர்க்கும் வாய்ப்பது அரிதே. வைணவ சிகாமணி.

14. பெ.மு.கோபாலாசாரியர்: [1923—1956] இவர் இந்த பகவத் கைங்கர்யத்தில் ஆழ்ந்து ஈடுபட்டவர். ஆஸ்திகராக் ரேஸர். பூர்வாசார்ய ஸ்ரீ ஸூக்திகளில் ஆழ்ந்த அவகாஹனமுள்ளவர். 33 ஆண்டுகள் அத்யாபக கைங்கர்யத்தில் தோய்ந்து அனுபவம் நிறைந்தவராய்த் திகழ்ந்தவர். கோஷ்டியின் சட்டதிட்டங்களை அடிக்கடி பிரஸ்தாபித்து அதன்படி எல்லோரையும் நடக்கச் செய்பவர்.

15. ஸ்ரீ உ. வே. வாத்தியார் ரங்கஸ்வாமி ஐயங்கார்: [1924—1945]. இவர் வாத்தியார்தனத்திற்கு எடுத்துக்காட்டு. நல்ல தோற்றம். மந்திர உச்சாரணம் ஸ்பஷ்டம், வைதிக நெறியில் முற்றிய ஞானமுடையவர். அத்யாபக கோஷ்டிக்கே ஓர் ஒளி தருபவர். மெதுவான நடை. மித பாஷி. எல்லா உற்சவங்களிலும் பங்கேற்பவர்.

16. ஸ்ரீ உ. வே. பழனூர் ரங்கப்பங்கார்: [1923—1964]. ஸாமவேத வாத்யார் எனப் பிரஸித்தி பெற்றவர். சாஸ்திரங்களின் தத்துவங்கள் நன்கறிந்தவர். ஸ்தோத்திரங்களையும் ரஹஸ்யங்களையும் அதிகரித்தவர். அத்யாபக கைங்கர்ய துரந்தரர். பரம ஸாத்விகர். 41 ஆண்டுகள் கோஷ்டி கைங்கர்யம் செய்தவர். உடம்பு தள்ளாமல் போனாலும் கைங்கர்யத்தை விடமாட்டார்.

17. ஸ்ரீ உ, வே. P. K. ஸ்ரீராம ஐயங்கார்: [1934—1982]. இவர் ஸதா ஸர்வ காலமும் ஆஸ்தையோடு கோஷ்டி கைங்கர்யத்திலேயே ஆழ்ந்திருப்பவர். எப்போதுமே அடிவயிற்றிலிருந்து கோஷமிட்டு ஸேவாகாலம் செய்பவர். சமீப காலம் வரையில் மேற்படி கோஷ்டியில் அந்வயித்தவர். லௌகிகத்தில் A, G. ஆபீஸில் வேலை பார்த்தவர். கோஷ்டியின் அச்சாணியாய் விளங்கியதோடு கைங்கர்ய விஷயத்தில் எந்தச் சந்தேகங்களையும் சிக்கல் அறுக்கும் ஹை கோர்ட் என்று பேர் வாங்கினவர். பரம ஸாதுவாய், தான் என்பதே தெரியாது 48 வருட காலம் கைங்கர்யத்தில் ஈடுபட்டது வைணவ உலகத்திற்கு ஓர் எடுத்துக்காட்டெனலாம்.

18, ஸ்ரீ உ. வே. K. V. அனந்தாசாரியர்: [1945—1977]. இவர் காவல் கழனி ஸ்வாமி என்று பிரஸித்தி பெற்றவர். தாசில்தாராய்ப் பணிபுரிந்தவர். கோயிலிலும் கோஷ்டியிலும் அன்வயிக்கும் காலத்தும் "தாசில்" பண்ணுவார். இவரது காலத்தில் கோஷ்டியின் உயிர்நாடியாய் விளங்கினார். கணீர் என்ற திருமிடற்றோசையுடன் இவர் ஸேவா காலம் விளங்கும். இவர் கட்டியம் ஸேவிப்பதே தனி அழகு. ஆழ்வார் அருளிச்செயலில் மண்டியவர். கோஷ்டியின் முதல் வரிசையில் தோதவத்தித் தூய்மறையோராய் பிளந்த குறி வேஷ்டி உத்தரீயத்தோடு அதி கம்பீரமாயும், அதி விலக்ஷணராயும், ஸேவை ஸாதிப்பர். கொஞ்சம் குள்ளம். இருப்பினும் எடுப்பு, மிடுக்கு, இவர் மறைந்தது திருவல்லிக்கேணிக்கே பேரிழப்பாகும்.

19. ஸ்ரீ உ. வே. காந்தூர் ரங்கஸ்வாமி ஐயங்கார்: [1934— ] இவர் நாலாயிர திவ்ய ப்ரபந்தங்களில் பூர்ண அதிகாரி. ஸம்ப்ரதாயங்களில் கேட்டதற்கு ஸமாதானம் சொல்லும் நிபுணர், இடைவிடாது கைங்கர்யத்தில் அன்வயித்து வந்தவர். இவருக்குக் காந்தூர் வாத்தியார் என்ற பெயரும் உண்டு. நல்ல சாஸ்திரக்ஞர். திருவல்லிக்கேணியில்

SRIVATSAM

அதிகாலையில் இன்றும் நடந்து வரும் ஸஹஸ்ரநாம பாராயண கோஷ்டி இவரால் ஆரம்பிக்கப்பட்டது. வேதவேதாந்த வர்த்தனீயின் மூலம் ஸந்தை சொல்லிப் பல இளைஞர்களை வைதீக உலகுக்கு உபயோகப்படுத்தும்படி செய்தவர்.

இனி தற்போது கோஷ்டியை அலங்கரித்து வரும் மஹான்களில் சிலரைப் பற்றி யான் அறிந்த வகை குறிப்பிடுகிறேன்.

20. அங். க. ஸ்ரீனிவாஸாசாரியர்: 1934 முதல் கிட்டத்தட்ட 50 வருட காலம் கைங்கர்யம் செய்யும் இவர் அனந்தேரி வாத்தியார் என்று பிரஸித்தி பெற்றவர். திவ்யப் பிரபந்தத்திலும் வேத பாராயணத்திலும் பார்த்தஸாரதி ஸந்நிதியின் திருவடிவாரத்தில் கைங்கர்யம் செய்வதே தமது குலதன்மாகக் கொண்டவர். இமையளவும் பிழை நேராதபடி கோஷ்டியில் நிர்வகிப்பவர், தீமை கண்டு பொங்குவர். தென்னுசார்ய சம்பிரதாயங்களை நழுவ விடாது காப்பவர். பணி மானம் பிழையாமே கைங்கர்யம் செய்யும் பெரியோர். வயதில் தொண்ணூற்றினை எட்டிப் பிடிக்கும் இளைஞர். இவர் ஆசிர்வாதம் எல்லோருக்குமே ஊக்கமூட்டும்.

21. ஸ்ரீ உ. வே. C. ஸ்ரீனிவாஸ வரதாசாரியர்: 1933 முதல் இன்றுவரை 50 வருடம் கைங்கர்யத்தில் அன்வயிப்பவர். இவர் தேசூர் ஸ்வாமி எனப் பிரஸித்தர். அத்யாபக கைங்கர்யத்தில் இறையேனும் தவருதவர். வயதில் தொண்ணூற்றினை எட்டிப்பிடிக்கும் இவர் இந்த முதிய வயதிலுங்கூட குந்திக்குந்தி நடந்து வந்து அதிகாலையில் ஸுப்ரபாதம் ஸேவிக்கும் பான்மையினைக் காணும்போது கண்கள் நீர்வாரும். இவர் உறவினர் இவரைக் கைப்பிடித்து அழைத்துக்கொண்டு வரும் போதும், சேவை முடிந்து திரும்பும் போதும் பார்ப்பவர் கண்கள் பாக்கியம் செய்தனவே. இவர் பல நூல்களைக் கண்டவர், இவரை யண்டிப் பலர் ஐயம் நீங்குவர். இவர் எழுதியுள்ள தேவப் பெருமாளும், ஸ்ரீ ராமானுஜ தர்சனமும் என்ற நூல் கொண்டே எம்பெருமானுர் தர்சனத்தில் இவருக்கு இருக்கும் ஊற்றத்தைத் தெற்றென அறியலாம். A. G. ஆபீஸில் லௌகிக உத்தியோகம் வகித்து ஓய்வு பெற்றவர். ஆங்கிலம் நன்கு தெரிந்தவர். சலவைக் கல்லில் உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி இவற்றை இந்த ஸந்நிதி மஹா மண்டபத்தில் பொறித்தவர். மிகப் பொறுமையுடன் எல்லாரிடமும் ஸகஜமாயும் வினயமாயும் பழகுவர்.

22. ஸ்ரீ உ. வே. காந்தூர் கிருஷ்ணமாசாரியர்: இவர் 1945 முதல் கோஷ்டி கைங்கர்யத்தில் அன்வயிப்பவர். அருளிச் செயல்களில் ஆழங்காற்பட்டவர். அத்யாபக கைங்கர்யத்தில் சிரத்தை மிக்கவர். சம்பிரதாய வல்லுநர். தற்சமயம் காந்தூர் வாத்தியார் என்று அழைக்கப்படுபவர். கணீர் என்ற த்வனியுடன் கைங்கர்யத்தில் ஈடுபடுபவர்.

23. ஸ்ரீ உ. வே. குவளை ராமாநுஜாசாரியர்: 1945 முதல் திருவல்லிக்கேணியில் ஸந்நிதி கைங்கர்யத்தில் அன்வயிக்கும் பிரசித்தர்களில் ஒருவர். நவநாகரிகர். உபய வேதத்திலும் வல்லவர். வாத்தியாரும்கூட. கைங்கர்யம் பண்ணிவிட்டு ப்ரயோஜனம் எதையும் எதிர்பாராதவர். தற்சமயம் வேத பாராயணத்திற்காகச் சில இளைஞர்களை உருவாக்கிக்கொண்டு வருகிறுர்.

24. ஸ்ரீ உ. வே. A. ராமானுஜாசாரியர்: இந்த ஸ்வாமி 1962 முதல் கைங்கர்யத்தில் 22 வருடமாய் விடாது அன்வயித்து வருபவர். இவர் அத்தி சோழ மங்கலம் ஸ்வாமி எனப் பிரசித்தர்.

SRIVATSAM

சாத்வீகமான தோற்றம். லௌகிகத்திலும் வைதிகம் செறிந்தவர். எப்போதும் ½ மணி காலம் முன்பே வந்து காத்திருந்து கைங்கர்யம் செய்பவர்.

25. ஸ்ரீ உ. வே. அஷ்டகோத்ரம் C. பார்த்தஸாரதி ஐயங்கார்: இவர் 1955-ஆம் ஆண்டிலிருந்து 28 வருட காலம் அத்யாபக கைங்கர்யம் செய்து வருபவர். அஷ்டகோத்ரம் பார்த்தஸாரதி என்று பெயர். இவர் ஹிந்து உயர்நிலைப் பள்ளியில் அடியேனிடம் மாணவனாக வாசித்தவர். அப்போது முதற்கொண்டே தீவிர வாதி. தென்னாசார்ய சம்பிரதாயங்களைக் கட்டிக்காப்பதிலேயே அல்லும் பகலும் அநவரதமும் உழைப்பவர். வாலிபப்பருவ முதல் கோஷ்டியில் அன்வயிப்பவர். இப்போது கார்யதரிசியாய் இருந்து அற்புதமான சாகஸ கைங்கர்யங்கள் பல நிர்வஹித்து வருகின்றார். புதிதாகக் கோஷ்டியைப்பற்றிப் புகார்கள் செய்து போர்டிலும் ஹைகோர்டுகளிலும் நடந்த தாவாக்களைப் பொறுமையுடன் கவனித்து அவ்வப்போது பதில் சொல்லி அந்தப் பந்தங்கள் அனைத்தும் நீங்கும் வரை ஸாதுவாய் இருந்து வென்றவர். எல்லோரையும் ஒன்று சேர்த்துக்கொண்டு கோஷ்டியின் பெருமையைத் தினம் உயர வைத்த பெருமை இவரைச் சேரும்.

அன்றியும் உத்ஸவங்களில் கோஷ்டியார் அனைவருக்குமே ததீயாராதனம் சிறப்பாக நடந்து வருவதும் இவரது முயற்சியாலே யாகும். இந்தக் கோஷ்டியினர் கொண்டாடின 760-ஆவது வருட கொண்டாட்டத்திற்கு மூலகாரணராய்த் தாம் ஒருவராய் நின்று நடத்தி இந்த நினைவு மலரையும் கொணர்வதற்கு அரும்பாடு பட்டவர். இவரது ஆர்வம், உற்சாகம், உறுதியுள்ளம் இவைகளைக்கண்டு பல தடவை அடியேன் வியந்ததுண்டு. தவிர சிறு பிராயத்திலிருந்தே ஸந்தை சொல்லிப் பல இளைஞர்களை முதல்முதலில் 'பெரிய திருமொழி' ஸேவா காலத்திற்காகத் தயார் செய்தவர் இவர். தமக்கு என்று எதையும் விரும்பாது எப்பலனையும் எதிர் பாராதவர்.

இப்படிப்பட்டவர்கள் மேலும் மேலும் தெய்வீகக் கைங்கர்யங்களில் அவகாஹித்து நிற்பராகில் அஃது வைணவ உலகு செய்த பாக்கியமாகும். ஸ்ரீ பார்த்தஸாரதிப் பெருமாள் அருள் இந்தக் கோஷ்டிக்கு என்றும் இருத்தல் வேண்டும். என்றும் இதைப்போல் ஊக்கம் உள்ளோர் பெருகி ஆக்கம் பெறவேண்டும் என விழைகின்றேன்.

'ஆழ்வார்கள் வாழி, அருளிச்செயல் வாழி'

"ப்ருந்தாரண்ய நிவாஸாய பலராமாநுஜாயச ருக்மிணீ ப்ராணநாதாய பார்த்தஸூதாய மங்களம்".

---

# சட்டரீதியான அந்தஸ்தும் மாற்றங்களும்

ஸ்ரீ உ. வே. P. B. அனந்தாசாரியர் அட்வகேட், சென்னை-1
தமிழாக்கம் : டாக்டர் ஸ்ரீமான் உ. வே. K. A. மணவாள ஐயங்கார்.

திருவல்லிக்கேணியில் இயங்கிவரும் மேற்படி கோஷ்டிக்கு, திருவல்லிக்கேணி **ஸ்ரீ பார்த்தஸாரதி சுவாமி தேவஸ்தான வேத அத்யாபக கோஷ்டி** என்று பெயர். சமுதாய மேம்பாட்டில் செல்வாக்குடைய பலர், பொதுவாகக் குடும்பநலனை முன்னிட்டும் தம்முடைய ஆயுஸின் அபிவிருத்தியை முன்னிட்டும் அறுபதாண்டு நிறைவு விழாவினைக் கொண்டாடி வருகிறார்கள். இது யாவரும் அறிந்ததே. ஆனால் சமய ரீதியான மேற்படி அத்யாபக கோஷ்டியானது அறுபதாண்டு நிறைவு விழாவினைக் கொண்டாடுவது என்பது ஒரு அஸாதாரணமான பெருமைக்குரிய விஷயமாகும். இப்படிக் கூறுவதனால் இந்தக் கோஷ்டியானது சுமார் அறுபதாண்டுகளுக்கு முன்புதான் தோன்றியது என்பது பொருளல்ல. 1923வது வருஷத்துக்கு 700 ஆண்டுகளுக்கும் முன்பாகவே இந்த அத்யாபக கோஷ்டியார் நாலாயிர திவ்யப் பிரபந்தங்களை மிகவும் பக்தியோடு கைங்கர்யமாகக் கோஷ்டியில் ஸேவித்து வந்திருக்கிறார்கள் என்பதனை மாண்புமிகு உயர்நீதிமன்ற நீதிபதி திரு குமாரசுவாமி சாஸ்த்திரி அவர்கள் அத்யாபகர்களுக்கும் ஸ்ரீ பார்த்தசாரதி சுவாமி தேவஸ்தான அறங்காவலர்களுக்கும் நடந்த பிரசித்தி பெற்ற வழக்கில் 1925 மே மாதம் முதல் தேதி மேற்படி அத்யாபகர்களுடைய கோஷ்டி உரிமையை உறுதிப்படுத்தியுள்ளார்கள். இந்த வழக்கானது C. S. 349 of 1923 என்று உயர்நீதிமன்ற (ரிகார்டில்) கோப்பில் பதிவாகியுள்ளது. இந்த வழக்கு கோயில் அறங்காவலர்களுக்கும் அத்யாபக கோஷ்டியாருக்கும் நடந்த பிரபலமான வழக்காகும்.

இந்த அத்யாபக கோஷ்டி உண்மையில் 761வது விழாவைக் கொண்டாடத் தகுதியுடையதாயிருப்பினும் மேற்படி சட்ட ரீதியான அங்கீகாரம் கிடைத்து அறுபதாண்டுகள் ஆவதால் தற்போது அறுபதாவது ஆண்டு விழாவைக் கொண்டாடுகிறது.

இந்த விழா அத்யாபக கோஷ்டியைச் சேர்ந்த எந்த ஒரு தனி நபருடைய நன்மைக்காகவோ அல்லது பெருமைக்காகவோ கொண்டாடப்படுவதன்று. எந்த விதமான பிரதிபலனையும் கருதாமல் நாள்தோறும் செய்துவரும் இக் கைங்கர்யத்தின் சிறப்பை யாவரும் அறியும்படி தாஸ்தாவேஜுகளில் இடம்பெறச் செய்வதற்காகவே கொண்டாடப்படுவதாகும். மேலும் பொதுவாக ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய ஆதரவைப் பெறுவதற்காகவும், சிறப்பாக ஸ்ரீ பார்த்தசாரதி சுவாமி ஸந்நிதி ஸேவார்த்திகளின் அன்பையும் ஆதரவையும் பெற்றுத் தலைமுறை தலைமுறையாக இந்த வேத அத்யாபக கோஷ்டியின் பேரும் புகழும் ஓங்கி இந்தக் கைங்கர்யத்தைச் செய்து வரவேண்டும் என்பதற்காகவும் கொண்டாடப்படுகிறது. இப்பெருமைக்குரிய விழாவின் மூலம் இத்தெய்வீகக் கைங்கர்யத்தைப் பதிவேட்டில் இக்கோஷ்டி சாச்வதப் படுத்திக்கொள்கிறது.

SRIVATSAM

1923-ம் ஆண்டு ஏற்பட்ட C.S./349 இலக்கமிட்ட இந்த வழக்கானது ஸ்ரீமான் அண்ணா ரங்காச்சார் என்பவராலும், மற்றும் திருவல்லிக்கேணியில் வசிக்கும் தென்கலை ஸ்ரீ வைஷ்ணவ பிராமண சமுதாயத்தைச் சேர்ந்த பலராலும் அப்பொழுது திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதி சுவாமி தேவஸ்தான அறங்காவலராயிருந்த ஸ்ரீமான் V. பார்த்தசாரதி ஐயங்கார் பேரிலும் மற்றும் சில நபர்கள் பேரிலும் தொடரப்பட்ட வழக்காகும்.

இந்த வழக்கில் மேற்படி ஸ்ரீமான் அண்ணா ரங்காச்சார் முதலியவர்கள் தங்களை அத்யாபக கோஷ்டி மிராசுதார்கள் என்றும், வேத பாராயணம், அருளப்பாடு, புராணம், கட்டியம் முதலிய கைங்கர்யங்களைச் செய்ய உரிமை பெறத் தகுதியுள்ளவர்களென்றும், மேலும் சில கௌரவ மரியாதைகளையும், பஹுமானங்களையும் அடையத் தகுதியுள்ளவர்களென்றும் மேற்சொன்ன பொறுப்புக்களுக்கு உரிமையாளர்கள் எனவும் அறுதியிட்டுக் கூறவேண்டும் என்று முறையிட்டு, உரிமை வழக்குத் தொடர்ந்தனர்.

இந்த உரிமை முறையீட்டு வழக்கில் மேற்சொன்ன தர்மகர்த்தாக்களாகிய அறங்காவலர்களுக்கு யாதொரு நபரையும் மேற்படி அத்யாபக கோஷ்டி கைங்கர்யங்களுக்குத் தன்னிஷ்டப்படி நியமிக்கவோ அல்லது கோஷ்டியைக் கட்டுப்படுத்தவோ அல்லது கோஷ்டியார் அனுபவித்துவரும் உரிமைகளில் தலையிடவோ அதிகாரமில்லை என்று மேற்படி C. S./349-1923வது ஆண்டு வழக்கில் வாதப்பட்டுள்ளது. இந்த வழக்குக்குக் காரணம் 1922-23-ல் ஸ்தலத்தாருக்கும் தர்மகர்த்தாக்களுக்கும் ஏற்பட்ட தகராறேயாகும்.

அத்யாபகர் மூலமாக இந்த வழக்குத் தொடரப்பட்டதனால் பிரதிவாதிகளாகிய தர்மகர்த்தாக்கள் அத்யாபகர்கள் மீது கோபங்கொண்டு ஆழ்வார் ஆசாரியர்களின் வாழி திருநாமங்களைச் சொல்லக் கூடாது என்று கோஷ்டியாரைத் தடுத்தனர். அப்படியும் மீறி வாழி திருநாமம் சொன்னவர்களை மேற்படி அத்யாபக கைங்கர்யத்தினின்றும் நீக்க முற்பட்டனர். அதோடு நில்லாமல் வழி வழியாகப் பின்பற்றப்பட்டுவந்த பழக்க வழக்கங்களுக்கு முரணாகவும் உரிமை கொண்டாட முற்பட்டனர். இதுவே இந்த வழக்கின் மூலகாரணமாகும்.

**இந்த வழக்கில் முதல்முதலாக ஏற்பட்ட தஸ்தாவேஜு ஆதாரம் :**

கிழக்கு இந்தியக் கம்பெனி ஆட்சிக் காலத்தில் கலெக்டராகப் பணியாற்றிய திரு. பிளாக் டௌன் துரை என்பவரால் 1785-ஆம் ஆண்டு டிசம்பர் ஐந்தாம் தேதியிட்ட முதல் தீர்ப்பேயாகும் (Award). இந்த தஸ்தாஜேஜு திருவல்லிக்கேணியில் தொன்மைக் காலத்திலிருந்து குடியிருந்த பழைய பிராமண சமுதாயத்தினர், கோஷ்டி என்று சொல்லப்படும் ஒரு குழுவினை ஏற்படுத்தி அதன் மூலம் அத்யாபகம் வேத பாராயணம் போன்ற தெய்வீகக் கைங்கர்யங்களைப் பெருமாள் முன்பாகச் செய்துவந்தனர் என்பதனை ருசுப்படுத்தியது. மேற்படி தஸ்தாவேஜிலும் அல்லது இந்த வழக்கில் பிரதிவாதியால் தாக்கல் செய்யப்பட்ட தஸ்தாவேஜுகளிலிருந்தும் மேற்சொன்ன தர்மகர்த்தாக்களோ அல்லது கிழக்கிந்தியக் கம்பெனி உரிமையாளர்களோ மேற்சொன்ன வேத அத்யாபக கைங்கர்யம் செய்வதற்கு எந்த நபரையும் நியமித்தற்கு உரிமையுள்ளவர்கள் என்ற வாதத்திற்கு ஆதாரம் ஏதும் இல்லையென்றும் எந்தக் காலத்திலாவது எவரையாவது நியமித்ததற்குரிய எந்த வித ஆதாரமும் இல்லையென்றும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளதைக் காணலாம்.

SRIVATSAM

யார் அத்யாபகர்களாக இருக்கவேண்டும் என்பதனையும் மேலும் பஹுமானம், மரியாதைப் பிரஸாதம் முதலியவைகளைப் பெறுவதற்குத் தகுதியுடையவர் யார் என்பதனையும் கற்றறிந்த கோஷ்டியைச் சேர்ந்த முதிய ஸ்ரீ வைஷ்ணவ பிராம்மணர்களே தீர்மானம் செய்தனர்.

மேலும் மேற்சொன்ன அத்யாபகர்கள் மேற்படி கோஷ்டி கடமைகளைச் சரிவரச் செய்யாது போனால் அவர்களைக் கட்டுப்படுத்தத் தங்களுக்கு எவ்விதப் பரிகாரமுமில்லையென்ற தர்மகர்த்தாக்களுடைய வாதத்தை மாண்புமிகு நீதிபதி அவர்கள் புறக்கணித்தார். அதோடு மாண்புமிகு நீதிபதி அவர்கள் கடந்த 700 ஆண்டுகளில் இம்மாதிரியான சந்தர்ப்பம் ஏற்பட்டதே இல்லையாதலால் இனியும் ஏற்படாது என்றும் உறுதி கூறியதோடு பஹுமானம், மரியாதை, தளிகைப் பிரஸாதங்கள் முதலியவைகள் இருப்பதால் அத்யாபகர்கள் ஒருபோதும் இக் கைங்கர்யங்களைக் கைவிடமாட்டார்கள் என்றும் கூறியுள்ளார். இவைகளைத் தவிர அத்யாபகர்களுக்கு நித்யப்படி $\frac{1}{4}$ தளிகைப் பிரஸாதம் வாங்கிக்கொள்ள உரிமையுண்டு என்றும் தெளிவாக்கியுள்ளார்.

பொது வாழ்க்கையில் முன்னணியிலிருக்கும் பெருமைக்குரிய பலர் தங்களுடைய மதிப்புக்குரிய சாட்சியங்களை மேற்படி மாண்புமிகு நீதிபதி திரு. குமாரசுவாமி சாஸ்த்திரியார் முன்னிலையில் கூறியுள்ளனர்.

திரு. V. M. லக்ஷ்மிநரசிம்மாசாரியார் என்ற பட்டதாரி போலீஸ் இன்ஸ்பெக்டர் அலுவலகத்தில் சூப்ரிடெண்டாகப் பணிபுரிந்தவர் ஒரு அத்யாபகராவர். இவர் தம்முடைய தந்தையைப் போலவும், பாட்டனாரைப்போலவும் சுமார் 40 வருடங்கள் வழிவழியாக இந்தக் கைங்கர்யங்களைச் செய்துவந்திருந்தார்.

அடுத்து வாதியின் தரப்பில் சாக்ஷியாக வந்தவர் திருவல்லிக்கேணி இந்து உயர் நிலைப்பள்ளியில் தமிழ்ப் பண்டிதராகப் பணிபுரிந்த திரு. கோபாலாசாரியராகும்.

நான்காவது வாதியாகச் சாக்ஷியங் கூறியவர் ஓய்வு பெற்ற ஜில்லா கோர்ட்டு நீதிபதியும், 1895-இல் மேற்படி தேவஸ்தான ரிஸீவராக இருந்தவருமான திவான் பகதூர் ஸ்ரீமான். M. O. பார்த்தசாரதி ஐயங்காராவர். அதற்கடுத்த சாக்ஷியாக வந்தவர் அக்கௌண்டண்ட் ஜெனரல் ஆபிசில் ஆடிட்டராகப் பணிபுரிந்து வந்த ஸ்ரீமான். P. B. ராமாநுஜாசாரியராவர்.

கடைசி சாக்ஷியாகவந்தவர் சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ் லெக்ஸிகன் அலுவலகத்தில் தமிழ்ப் பண்டிதராகப் பணிபுரிந்தவரும் புகழாளருமான ஸ்ரீமான் V. M. கோபாலகிருஷ்ணமாசாரியராவர்.

மேற்சொன்ன சாக்ஷிகள் கூறிய விஷயங்கள் யாவும் ஸ்ரீமான் அண்ணு ரங்காச்சார் என்னும் 75 வயதுடைய மூத்தவரின் வழக்கு விஷயங்களுக்கு அனுசரணையாகவே அமைந்தன. மேற்கூறிய எல்லா சாக்ஷியங்களையும் மேன்மை தங்கிய நீதிபதி முழுமையாக ஆதரித்ததோடு நில்லாமல் அத்யாபகர் எவரும் தர்மகர்த்தாக்களால் நியமனம் செய்யப்படவில்லை என்றும், மேலும் அத்யாபகர்களே தங்களுக்குள்ளாகவே பிறரை அத்யாபகர்களாக நியமித்துள்ளார்கள் என்றும் கூறியுள்ளார்.

இந்த அத்யாபகர்கள் ஆழ்வார் ஆசாரியர்களுடைய திருநக்ஷத்திர தினங்களில் அவரவர்களுடைய வாழி திருநாமங்களைச் சொல்லி முடிவில் 'மணவாள மாமுனியே இன்னும் ஒரு நூற்றாண்டிரும்' என்று ஸேவையை முடிப்பர். இந்த

SRIVATSAM

அத்யாபகர்கள் வயது முதிர்ந்த ஒருவரைத் தங்களுக்குத் தலைவராகத் தேர்ந்து எடுத்து அவரைக்கொண்டு 'சாதித்தருளா' என்று தொடங்கவைத்து மேலும் தீர்த்தம், சடகோபன், பிரஸாதம் முதலியவைகளைப் பெற்று வந்தார்கள். மேலும் இந்த அத்யாபக வழக்கில் மாண்புமிகு நீதிபதி அவர்கள் பிரதிவாதியின் முதலாவது சாக்ஷியாக வந்த ஸ்ரீமான் திருமலாசாரியார் கூறிய வாக்கு மூலத்தை உபயோக மில்லாதது என்றும், அந்த சாக்ஷிக்காரர் முதலாவது பிரதிவாதியின் 'பொம்மை' (a creature) என்றும் கூறித் தள்ளுபடி செய்தார். மேலும் இந்த வழக்கில் இரண்டாவது சாக்ஷியாகவும் கடைசி சாக்ஷியாகவும் வந்த கோவில் அமீனுவினுடைய வாதத்தையும் நம்பத்தகுந்த தல்ல என்றும், முதல் பிரதிவாதியின் பெண்ணை இந்த அமீனுவினுடைய மகன் மணந்து கொண்டிருப்பதால் இவருடைய சாக்ஷி நம்பத்தக்கதல்ல என்பதற்குக் காரணம் என்றும் கூறியுள்ளார். அதோடு 1875-ஆம் ஆண்டிலிருந்து இந்தக்கோவிலின் டிரஸ்டிகள் இந்த அத்யாபக கோஷ்டியினரைத் தங்களுடைய கட்டுப்பாட்டுக்குள் வைத்து அடக்கியாள வேண்டும் என்றும், அத்யாபகர்களை நியமிப்பதற்கும், வெளியேற்றுவதற்கும் உரிய உரிமைகளைப்பெற வேண்டு மென்றும் முயன்று வெற்றி பெறவில்லை. இனி இம்மாதிரி அதிகாரங்களைப் பெற உரிமைகோரும் நிலை எழாது என்று நம்புவோமாக.

SRIVATSAM

மாண்புமிகு நீதிபதி அவர்கள் நேர்முக சாக்ஷிகளையும் தஸ்தாவேஜு (ரிக்கார்டு) சாக்ஷியங்களையும் கொண்டு பின்வரும் முடிவுகளை (தீர்ப்புக்களை)க் கூறியுள்ளார்:

(1) திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தசாரதி சுவாமி தேவஸ்தான அத்யாபக வேதபாராயண கைங்கர்யங்கள் மிகப் பழங்காலந்தொட்டே (time immemorial) திருவல்லிக்கேணியில் வசிக்கும் தென்கலை ஸ்ரீவைஷ்ணவ பிராமணச் சமூகத்தாரிடமே ஒப்படைக்கப் பட்டுள்ளது.

(2) பல வருஷங்களாகவே திருவல்லிக்கேணியில் வசிக்கும் தென்கலை ஸ்ரீவைஷ்ணவப் பிராம்மணர்களில் நாலாயிரம் பாசுரங்களில் 2000 பாசுரங்களையும், முக்கியமான—தேவைப்பட்ட வேத பாகங்களையும் அறிந்தவர்கள் நித்ய பூஜைகளிலும், வீதிபுறப்பாடுகளிலும், உத்ஸவங்களிலும் கோஷ்டியை அமைத்துக் கொண்டு கைங்கர்யங்களைச் செய்து அதற்குரிய தளிகைப் பிரஸாதங்களையும் பெற்று வந்தார்கள்.

(3) இந்தக் கைங்கர்யம் செய்யும் குழுவினர்தான் அங்கிகரிக்கத்தக்க குழுவினராவர்.

(4) இந்தக் கோஷ்டியில் புதிய அங்கத்தினர்களைச் சேர்க்கும் உரிமையைத் தேவையான பொழுது கோஷ்டியின் மூத்த தலைவர்கள் செய்வார்கள்.

(5) கோயில் அறங்காவலர்களுக்கு இந்த அத்யாபக கோஷ்டிக்கு அங்கத்தினர்களை நியமிக்கவோ அல்லது இந்தக் கோஷ்டியாரை நீக்கவோ உரிமை கிடையாது.

(6) இந்தக்கோஷ்டியைத்தொடங்கித் தலைமை ஏற்பவரிடமே கோஷ்டிக்குரிய பிரஸாதம் வழங்கப்படும். அவரில்லையானால் கோஷ்டியில் மூத்தவரிடம் கொடுக்கப் படும்.

(7) கோஷ்டியின் தலைவரே தொடங்குவதற்கு உரிமை பெற்றவராவார். அவரே தீர்த்தம் முதலியவைகளை முதலில் பெற உரிமையுடையவராவார்.

(8) குறைந்தது ஆறு மாதமாவது திருவல்லிக்கேணியில் நித்யவாசம் செய்பவராகவும் கோஷ்டியில் கைங்கர்யம் செய்து வருபவராகவும் இருக்கக் கூடியவரே அத்யாபகராகத் தேர்ந்தெடுக்கத் தகுதியுடையவராவார்.

(9) மேலும் திருவல்லிக்கேணியில் வசிக்கும் தென்கலை ஸ்ரீவைஷ்ணவ பிராம்மணர்களும் இந்த உரிமையைப்பெற்று ஆழ்வார் ஆசாரியர்களுடைய திருநக்ஷத்திர நாட்களில் அவரவர்வாழி திருநாமங்களை (ஸ்ரீவேதாந்த தேசிகருடைய வாழி திருநாமத்தைத் தவிர்த்து) ஸ்ரீமணவாள மாமுனிகளின் வாழி திருநாமங்களைச் சொன்னவுடன் சொல்லலாம்,

(10) மாண்புமிகு நீதிபதியின் பரிந்துரையின் பேரில் மேற்கூறிய நிபந்தனைகள் 1924-ஆம் வருஷத்திய C.S.No.527 ஸ்கீமில் சேர்க்கப்பட்டு உயர் நீதி மன்றத்தின் தீர்ப்புக்காக விண்ணப்பிக்கப்பட்டது. இந்த ஸ்கீமின் தீர்ப்புப் பின்னர் கொடுக்கப்பட்டு, அதில் 41, 42 பிரிவுகளின் கீழ் இந்தக் கோஷ்டிக்கு மேற்படி C. S. No. 349 of 1923-இல் காண்பிக்கப்பட்ட உரிமைகளை அறுதியிட்டுக் கூறப்பட்டுள்ளது. அவை நமது கோஷ்டியின் உரிமைச்சாசனமாகும். இந்த உயர் நீதிமன்றத்தின் இரண்டு தீர்ப்புகளும் முடிவானவையாகும். ஏனெனில் அவைகளை எதிர்த்து எந்தவிதமான அப்பீலும் யாராலும் செய்யப்படவில்லை.

(11) ஆனால் வெகுகாலத்துக்குப் பிறகு இந்த அத்யாபக கோஷ்டியிலிருந்து விலகிய சிலர் இந்த ஸ்கீமின் சில ஷரத்துக்களை எதிர்த்து மறைமுகமாகச் செயல்பட்டார்கள். அவர்கள் உயர் நீதிமன்றத்தில் 1972-ஆம் வருஷத்து 2457 என்ற நெம்பரில் C. S. No. 349 of 1923–இன் கீழ் ஒன்றும் 1972-ஆம் வருஷத்திய 2986 என்ற வரிசையில் C.S.No. 527 of 1924-இன் கீழ் ஒன்றுமாக இரண்டு விண்ணப்பங்களைத் தாக்கல் செய்தார்கள். இதன் மூலம் அவர்கள் மற்ற அத்யாபக கோஷ்டி அங்கத்தினர்களுடன் தங்களுக்கும் திவ்விய பிரபந்தம் வேதம் முதலியவைகளைச் சொல்வதில் சம உரிமையும் அவ்வாறே கோஷ்டியின் முன்னால் மரியாதை பஹுமானப் பிரஸாதங்களைப் பெறுவதற்குரிய உரிமைகளையும் வேண்டும் என்று கோரினர்.

இந்த விண்ணப்பதாரர்கள் மற்றும் திருவல்லிக்கேணியில் வசிக்கும் 21 ஸ்ரீ வைஷ்ணவ பிராம்மணர்களுடன் கூடி திருவல்லிக்கேணி தென்கலை ஸ்ரீ வைஷ்ணவ பிராம்மணர்கள் சபை என்ற பெயரில் ஒருகுழுவை அமைத்துக்கொண்டு அதை 6-10-1972-இல் பதிவு செய்துகொண்டார்கள். அவர்கள் மேற்படி விண்ணப்பங்கள் மூலம் இந்த அத்யாபக

SRIVATSAM

கோஷ்டி, தங்களைக் கோவிலில் கைங்கர்யம் செய்து பிரஸாதம் முதலியவைகளைப் பெறுவதைத் தடுப்பதினின்றும் தடைவிதிக்கக் கோரி ஒரு நீதிமன்ற ஆணையைப் பிறப்பிக்குமாறு வேண்டினர். இவ்விதம் தாக்கல் செய்யப்பட்ட மனுக்கள் ஒன்ருகவும் விரிவாகவும் நன்கு விசாரிக்கப்பட்டு மாண்புமிகு உயர் நீதிமன்ற நீதிபதி திரு. பால் அவர்களால் 31-7-73 தேதியிடப்பட்ட பொது ஆணையின் மூலம் சட்டத்திற்கும், உண்மைக்கும் இவர்களுடைய கோரிக்கைகள் புறம்பானவை என்று தள்ளுபடி செய்யப்பட்டது. மேலும் மாண்புமிகு நீதிபதி அவர்கள் இதற்குமுன் அமுலில் இருந்துவரும் தீர்ப்பைப் பிரத்யேகமாக உறுதி செய்து, அத்யாபக கோஷ்டியில் அங்கத்தினர்களைச் சேர்க்கும் உரிமை கோஷ்டியின் மூத்த தலைவர்களுக்கே உண்டு என்று தீர்மானமாகக் கூறியுள்ளார். இந்தத் தீர்ப்பை எதிர்த்து எந்தவிதமான அப்பீலும் செய்யப்படவில்லையாதலால் இந்தக் கோர்ட்டுத் தீர்ப்பே முடிவானதாக உள்ளது.

(12) ஆனுலும் மேற்கூறிய விண்ணப்பதாரர்களாலும் மற்றும் மூவராலும் மறைமுகமாகப் பயனற்ற வகையில் நான்கு வருடங்கள் கழித்து மேன்மைமிகு இந்து அறநிலைய ஆணையர் முன்பாக ஒரு விண்ணப்பம் தாக்கல் செய்யப்பட்டது. இதன் மூலமாக அவர்கள் தங்கள் உரிமையைக் கொண்டாடி கனம் நீதிபதி பால் அவர்களின் தீர்ப்பை மீறும் வகையில் C.S.No. 349 of 1923-இல் கண்ட மேற்படி ஷரத்துக்களை நீக்கி விடுவதற்காகவும், அதில் மிகவும் முக்கியமாக அத்யாபக கோஷ்டியில் ஏற்படும் காலி ஸ்தானங்களுக்குத் தங்களுக்குள்ளாகவே பிறரைத் தேர்ந்தெடுத்துத் தேவஸ்தானத்தாருக்குத் தரப்படும் அத்யாபக கோஷ்டியாருடைய பெயர்ப் பட்டியலைப் பற்றியும் ஆக்ஷேபணைகளைத் தெரிவித்தும் விண்ணப்பித்தார்கள்.

இதன் பிறகு கோஷ்டியாருடைய ஆக்ஷேபணைகளையும் விண்ணப்பதாரர்களுடைய மனுவையும் கேட்டறிந்து மேன்மைமிகு இந்து அறநிலைய ஆணையர் அவர்கள் 1977 R. C. No. 9349 என்ற இவர்களால் தாக்கல் செய்யப்பட்ட மனுவைத் தள்ளுபடி செய்துவிட்டார்.

இதற்கிடையில் அறங்காவலர் நியமனச் சட்டத்தின்கீழ் மூன்று அறங்காவலர்களையும் நிர்வாக அதிகாரியையும் அமர்த்துவதில் கனம் துணை ஆணையர் அவர்கள் மேற்படி C. S. No. 527 of 1924 என்ற உயர்நீதி மன்றத் தீர்ப்பை மேற்கோளாகக்காட்டி. கவனப் படுத்தியுள்ளார்.

அறநிலைய ஆட்சித் துறையின் 30-4-75-ஆம் தேதியிட்ட I.A. No. 129 of 1974-இன் கீழ் கடைசியாக மாறுதல் செய்து அனுப்பப்பட்ட ஆணையின் 28-ஆவது

SRIVATSAM

பிரிவில் இந்த அத்யாபகர்களைக் கோவிலில் அமர்த்தி அவர்களுக்கு பஹுமானங்கள் மரியாதைகள் முதலியவைகளைப் பற்றியும் அவர்களுடைய உரிமைகள் கடமைகள் பற்றியும் எல்லா விஷயங்களிலும் C, S. No. 349 of 1923 என்ற மேற்படி உயர் நீதிமன்ற தீர்ப்பே முடிவானது என்று கூறப்பட்டுள்ளது. மேலும் நித்தியபடி அத்யாபக கைங்கர்யம் செய்யும் கோஷ்டியாரின் அனுமதிக்கப்பட்ட நபர்களின் பட்டியல் அறங்காவலர் வசம் கொடுக்கப்பட்டு அந்தப் பட்டியலில் கண்டுள்ள நபர்களே எல்லாவிதமான உரிமையான வருமானங்களைப் பெறத் தகுதியுடையவர்கள் என்றும் கூறப்பட்டுள்ளது.

இந்த முடிவான தீர்ப்புக்குப் பின் இனிமேல் எந்தவிதத்திலும் நேரிடையாகவோ மறைமுகமாகவோ குந்தகம் ஏற்படாமல் அத்யாபக கோஷ்டியாரின் உரிமைகள் பரிபாலிக்கப்படும் என்ற நம்பிக்கையுடன் தொன்றுதொட்டுப் பேருடனும் புகழுடனும் நடந்துவரும் இக் கோஷ்டியாரின் கைங்கர்யங்கள் ஸ்ரீ பார்த்தசாரதி சுவாமியின் திருவருளால் பிற்கால சந்ததியாராலும் மேன்மேலும் சிறப்பாகப் பரிபாலிக்கப்பட்டு ஓங்கவேண்டும் என்று பிரார்த்தித்து, இந்த நல்ல கைங்கர்யத்தில் பங்குபெற எனக்கு வாய்ப்பளித்ததற்காக நன்றியைத் தெரிவித்து முடிக்கிறேன்.

SRIVATSAM

# திவ்ய தேசங்களில் அத்யாபக கைங்கர்யங்கள்

## 1. திருவல்லிக்கேணி

திருவல்லிக்கேணியாகிய இந்த திவ்ய தேசம், துவாபரயுகத்தில் அவதரித்த பேயாழ்வார், திருமழிசையாழ்வார் இவர்களது மங்களாசாஸநம் பெற்றது, ஆதலின் மிகவும் புராதனமானது. ப்ருந்தாரண்யம் என்று பாராட்டப்பட்ட இத்தலத்தில் ப்ருகு, அத்ரி முதலிய முனிவர் கணங்கணமாகத் தவஞ்செய்து வந்தனர். இவர்கள் காரணமாக இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்கள் மந்நாதன், தெள்ளிய சிங்கர், இராமபிரான், கஜவரதன், ஸ்ரீ பார்த்த சாரதிப் பெருமான். ஆத்ரேய முனிவர் வணங்கியது. இப்பதியின் அருகிலுள்ள ஸ்தலங்கள் முன்னை மேன்மையை நினைப்பூட்டும் வண்ணம் ஆயிர விளக்கு (ஆயர் விளக்கு என்ற கண்ண பிரான் திருநாமம் ஏற்றது), ஆள்வார் பேட்டை (நெடுங்காலமாக) முதலாழ்வார்களும் திருமழிசை யாழ்வாரும் சேர்ந்து தவஞ்செய்த தலம், ஆனைக்குளம் (கஜவரதன் ஆனையின் துயரைத் தீர்த்த வரலாற்றை நினைவூட்டுவது)—ஐஸ் ஹவுஸ் போலீஸ் ஸ்டேஷனுக்கு அருகிலுள்ள நிலப் பரப்பு—இன்றும் விளங்குகின்றன.

இவ்வாறு புராதனமான இந்தத் திவ்ய தேசத்தில் திருக்கோயிலில் கைங்கர்யத்தில் நெடுங்காலமாக ஊன்றியுள்ளனர் தென்கலை ஸ்ரீ வைஷ்ணவர்கள். இவர்களது கோஷ்டி ஏறக்குறைய எழுநூறு வருஷ காலமாக இயங்கி வருகிறது என்பது வியப்பதற்கில்லை. 1923ஆம் வருஷம் முடிவுற்ற உயர்நீதி மன்ற வழக்கில்—C. S. 349இல் இந்தக் கோஷ்டி நெடுங்காலமாக இயங்கி வருகிறதென்றும், இதில் உறுப்பினராகும் உரிமை இத்தலத்தில் வாழ்ந்துவரும் தென்கலை ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கே என்றும், இந்தக் கோஷ்டி அதிகாரிகளது ஆணைக்குள் அடங்காததாய், தானே சுதந்தரமாக இயங்கி வருவதென்றும் நிலைநாட்டப்பெற்றது. இதன் உறுப்பினருள் மூத்தோர் (Elderly members) முக்கியமானவர்கள் என்றும், இவர்களது அங்கீகாரத்தாலேயே மற்ற உறுப்பினர் ஏற்றுக்கொள்ளப்படுவர் என்றும், இம் மூதுவோர்களுள் ஒருவர் சபைத் தலைவராகவும் ஒருவர் செயலராகவும் கோஷ்டியை நடத்தி வரவேண்டுமென்றும் வழக்கத்தில் வந்துள்ளது. இந்தக் கோஷ்டியின் உறுப்பினரின் எண்ணிக்கை, தேவைக்கேற்ப அவ்வப்போது மாறுபட்டு வந்துள்ளது. இந்தக் கோஷ்டியின் அலுவல்களைக் கண்காணிக்கவோ, உறுப்பினரை நியமிக்கவோ கோயிலதிகாரிகளுக்கோ அல்லது வேறு நிறுவனத்திற்கோ அதிகாரமில்லை.

SRIVATSAM

இந்தக் கோஷ்டியார் ஸந்நிதிகளிற் செய்து வரும் கைங்கர்யங்களை விவரமாக வரைவோம். இவர்கள் செய்துவரும் கைங்கர்யம், குறிப்பாக வேதபாராயணம், திவ்யப்ரபந்த ஸேவை.

1. நித்தியப்படி நடக்கும் கைங்கர்யங்கள் ;

காலையில் ஸந்நிதிக்குத் திருமஞ்சனம் வந்தபின் விச்வரூப தர்சனத்தில் ஸுப்ரபாதம் ஸேவிக்கப்படும், திருவாராதனம், மந்த்ரபுஷ்பம் இவற்றிற்குப்பின், திருமணி ஸேவித்ததும், "ஸாதித்தருள" என்று மூதுவர் ஸ்வாமி தொடங்க, மஹாமண்டபத்தில் உடையவர் ஸந்நிதிக்கு எதிரில் திருப்பல்லாண்டு, திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை இவை மூன்றும் முன்னடி-பின்னடியாக ஸேவிப்பர், அத்யாபகர்கள். பின்பு ஸ்ரீ அழகியசிங்கர் ஸந்நிதியில் திருப்

பல்லாண்டு, திருப்பாவை இரண்டும் ஸேவித்துச் சாற்றுமறை நிகழும். பின்னர் பெரிய ஸந்நிதியில் ஸ்ரீ செல்வர் எழுந்தருளி பலி ஸாதித்த பிறகு திருப்பாவை சாற்றுமறை நடக்கும்.

2. சாயந்தரம் நித்யாநுஸந்தான ஸேவாக்ரமம் :

திருப்பல்லாண்டு தொடங்கியே ஸேவை நடைபெறும்.

ஆழ்வார்-ஆசார்யர்கள் திருநக்ஷத்ரம் அல்லாத நாட்களில் ஸேவை: திருப்பல்லாண்டு, பூச்சூடல், காப்பிடல், சென்னியோங்கு (முன்னடி-பின்னடி), விற்பெரு விழவும் (4 பாதமும்), உலகமுண்ட, கங்குலும் பகலும், ஆழியெழ, அமலனாதிபிரான், கண்ணிநுண்சிறுத்தாம்பு (முன்னடி-பின்னடி). கண்ணிநுண் சிறுத்தாம்பு முடிந்ததும் உடனே சாற்றுமறை, "இன்னுமொரு நூற்றாண்டிரும்" வரையில்.

ஆழ்வார்-ஆசார்ய திருநக்ஷத்ர நாட்களில், பெரிய ஸந்நிதிக்கு வெளியிலுள்ள ஸந்நிதிகளில், பெரிய ஸந்நிதியில் நித்யாநுஸந்தானம் முடிந்த பிறகு ஸேவை நடக்கும். பெரிய ஸந்நிதி எல்லைக்குள் எழுந்தருளியிருக்கும் ஆழ்வார்—ஆசாரியர்களுக்கு நித்யாநுஸந்தானம், இல்லாமல் ஸ்வப்ரபந்தம் ஸேவையாகும். ஸேனை முதலியார், ஆசார்யர்கள் இவர்களுக்கு இராமாநுச நூற்றந்தாதி சேவை.

ஆழ்வார்களது மாஸத் திருநக்ஷத்ரத்தின் போது ஸேவா க்ரமம்:

(1) விசாகம்-நம்மாழ்வார் ஸந்நிதியில்-திருவிருத்தம் (4 பாதமும்)

(2) கார்த்திகை - திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் (4 பாதமும்)

(3)புனர்வஸு - பெருமாள் திருமொழி (4 பாதமும்)

(4) கேட்டை-திருமாலை (4 பாதமும்)

(5) ரேவதி (மந்நாதன் புறப்பாடு) ஆஸ்தானம் நிகழும்போது-திருமாலை-4 பாதமும்.

(6) திருவோணம், அவிட்டம், சதயம்-முறையே முதல் திருவந்தாதி, இரண்டாம் திருவந்தாதி, மூன்றாம் திருவந்தாதி (4 பாதமும்)

(7) ரோகிணி-பெருமாள் புறப்பாடு இருந்தால்—அமலனாதிபிரான் மட்டும் ஸேவித்து, சாற்றுமறை. இல்லாவிடில் நித்யாநு ஸந்தானம் ஸேவித்து அமலனாதி பிரான் (4 பாதமும்) சாற்றுமறை.

(8) சித்திரை - கண்ணிநுண்சிறுத்தாம்பு வரையில் ஸேவித்துச் சாற்றுமறை.

(9) பூரம்—ஆண்டாள் ஸந்நிதியில்-நாச்சியார் திருமொழி-முன்னடி-பின்னடியாக.

(10) ஸ்வாதி—பெரியாழ்வார் திருமொழி.

வண்ணமாடம், வட்டுநடுவே; மெச்சூது, ஆநிரை, இந்திரன், ஆற்றிலிருந்து; தன்னேராயிரம்; நெறிந்தகுழல், கதிராயிரம், துப்புடை, வாக்குத் தூய்மை, நெய்க்குடம், துக்கச் சுழலை, சென்னியோங்கு (முன்னடி-பின்னடி)

(11) எம்பெருமானார் - இராமாநுச நூற்றந்தாதி (நாலு பாதம்) (சேனை முதலியார், நாதமுனிகள், ஆளவந்தார், ஆழ்வான், திருக்கச்சிநம்பி இவர்கள் திருநக்ஷத்திரத்தில் முன்னடி-பின்னடி).

(12) மணவாள மாமுனிகள்-உபதேச ரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி (4 பாதமும்)

செல்வர் புறப்பாடு

தினந்தோறும் திருப்பாவை சாற்றுமறைக்கு முன்பலி ஸாதிப்பதற்குச்செல்வர்

எழுந்தருள்வார்; இரவு அர்த்த ஜாமத்திற்கு முன்னும் எழுந்தருள்வார்.

காலையில் பெருமாளுக்கு (எவருக்கேனும்) புறப்பாடு நடந்தால் செல்வருக்குப் புறப்பாடில்லை; இவ்வாறே இரவிலும்.

**பஞ்ச பர்வப் புறப்பாடுகள்**

(1) ஸ்ரீபார்த்த ஸாரதிக்கு ஏகாதசி, 2. அமாவாசை—இவற்றில் பெரிய திருவீதிப் புறப்பாடு; மாதப் பிறப்பு. பௌர்ணமி. ரோஹிணி, திருவோணம் இந்நாட்களில் மாடவீதிப் புறப்பாடு.

(2) ஸ்ரீ அழகிய சிங்கர், வரதராஜன், ஸ்ரீராமபிரான், ஸ்ரீமந்நாதன் இவர்களுக்கு அடைவே ஸ்வாதி, ஹஸ்தம், புனர்வஸு, ரேவதி இந்நாட்களில் மாடவீதிப் புறப்பாடு.

இப்புறப்பாடுகளின்போது திருவீதியில் கோஷ்டியில் ஸேவை மூன்றாந்திருவந்தாதி. ஸ்ரீ பேயாழ்வாரது அவதாரஸ்தலம் திருமயிலை, திருவல்லிக்கேணி, "மாமயிலைத் திருவல்லிக்கேணி" ஆதலால் மூன்றாந் திருவந்தாதி ஸேவிக்கப்படுகிறது. அன்றியும் ப்ரஹ்மோத்ஸவங்களில் மூன்றாந் திருநாள் காலையில் இந்த மூன்றாந் திருவந்தாதி ஸேவை.

(3) வேதவல்லித் தாயாருக்கு வெள்ளிக்கிழமை, உத்திரம் இந்நாட்களில் ப்ராகாரத்தில் புறப்பாடாகி, த்வஜஸ்தம்ப ப்ரதக்ஷிணத்தில் சிறிய திருமடல் சேவை, வெள்ளிக்கிழமை திருவாய்மொழி மண்டபத்தில் த்வஜஸ்தம்பத்தருகே திருமடல் சாற்றுமறை. ஸேவையின் போது மேள வாத்யம் இல்லை. உத்திரத்தின்போது கோஷ்டி தொடங்கி, பின்பு மேள வாத்யத்துடன் நாச்சியார் ஊஞ்சல் மண்டத்தருகில் எழுந்தருளியிருக்கும் போது திருமடல் சாற்றுமறை நடக்கும். இது திருவீதிப் புறப்பாடு அனுஷ்டான க்ரமம்.

**திவ்யப்ரபந்தம் 4000 பாசுரங்களும் ஸேவிக்கப்பெறும் உத்ஸவங்கள்**

(1) சித்திரைமாதம்-ஸ்ரீபார்த்தஸாரதி ப்ரஹ்மோத்ஸவம்: காலையில் புறப்பாட்டின்போது திருவீதியில் முதல் ஐந்து நாள் இயற்பா. ஆறாவது திருநாள் காலை சூர்ணோத்ஸவம், திருச்சந்த விருத்தம் ஸேவை. ஏழாம் திருநாள் திருத்தேர். திருவெழுகூற்றிருக்கை, பெரிய திருமொழி தொடக்கம். எட்டாம் திருநாள், காலையில் சிறிய திருமடல், பெரிய திருமொழி; ஒன்பதாம் திருநாள் காலையில் பெரிய திருமடல், பெரிய திருமொழி.

இரவில் முதல் நாளில் தொடங்கிப் பெரியாழ்வார் திருமொழி, திருப்பாவை, நாச்சியார் திருமொழி, பெருமாள் திருமொழி, திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு. ஆறாம் உத்ஸவம் இரவு முதலாயிரம் சாற்றுமறை. எட்டாம் உத்ஸவம், ஒன்பதாம் உத்ஸவம் இரவில் பெரிய திருமொழி. ஒன்பதாம் உத்ஸவம் இரவில் பெரிய திருமொழி சாற்றுமறை, த்வஜ-அவரோஹணத்திற்குப் பிறகு.

பத்தாம் உத்ஸவம் ஸப்தாவரணம்; திருமஞ்சனத்திற்குப் பிறகு திருவாய்மொழி ஆயிரமும் சேவை. இரவு திருவீதியில், இராமானுச நூற்றந்தாதியும் இயற்சாற்றும்.

முதல் திருநாள் த்வஜாரோஹணத்திற்குப் பின் திருவீதிப் புறப்பாடு முடிந்ததும் உள்ளே திருவாய்மொழி மண்டபத்தில் சோபாநுக்ஷதை விநியோகம், அநுக்ரஹம். இவை முடிந்தபின் இயற்சாற்று.

2, 3. 4, 5, 6-ஆம் திருநாட்களில் காலைப் புறப்பாடு முடிந்ததும் வாகன மண்டபத்திலேயே இயற்சாற்று. 7ஆம் உத்ஸவம் இது இல்லை.

SRIVATSAM

8ஆம் உத்ஸவத்தில் புறப்பாட்டிற்குப் பிறகு திருவாய்மொழி மண்டபத்திலும், 9ஆம் உத்ஸவம், ப்ரணய கலக உத்ஸவத்திற்குப் பெருமாள் திருவாய்மொழி மண்டபத்தில் இறங்கிய பிறகும், 10ஆம் உத்ஸவம் இரவு திருவீதிப் புறப்பாடு கோஷ்டியில் இராமாநுச நூற்றந்தாதி சாற்றுமறையின்போதும் இயற்சாற்று.

(2) ஆனி மாஸம்: ஸ்ரீ அழகிய சிங்கர் ப்ரஹ்மோத்ஸவம்–இதே கிரமத்தில்.

(3) சித்திரை மாஸம்: ஸ்ரீ எம்பெருமானார் அவதார உத்ஸவம். ஸ்ரீ பார்த்தஸாரதியே எம்பெருமானாராக அவதரித்தார் என்பது பெரியோர்களது ஸித்தாந்தம். ஆதலால் ஸ்ரீ பார்த்தஸாரதிக்கு நடப்பது போலவே, (a) கண்ணாடி மண்டபத்தில் எழுந்தருளியிருத்தல், (b) இரண்டு வேளைகளிலும் புறப்பாடு, (c) கங்கைகொண்டான் மண்டபத்தில் திருமண்டபம் கண்டருளல் இவை எம்பெருமானாருக்கும் நடக்கும்.

SRIVATSAM

இந்த உத்ஸவத்தில் காலையில் புறப்பாட்டின்போது இயற்பா ஸேவை; திருமஞ்சனத்திற்குப் பிறகு திருப்பாவையோடு முதலாயிரம், பெரிய திருமொழி ஸேவை. ஐந்தாவது திருநாள் புறப்பாட்டில் முதலாயிரம் சாற்றுமறை ஆகும். ஆறும் உத்ஸவத்தில் திருமஞ்சனத்திற்குப் பிறகு ஸேவையில் விற்பெருவிழவும் சாற்றுமறை. இரவில் புறப்பாடுகளில் முதலாயிரம், பெரிய திருமொழி இவை திருமஞ்சனத்திற்குப் பின் நடந்ததைத் தொடர்ந்து நடைபெறும்.

இரவு எம்பெருமானார் திருவாய்மொழி மண்டபத்தில் எழுந்தருளிய பின் திருவாய்மொழி ஸேவை; தினம் ஒரு பத்து.

பத்தாம் உத்ஸவம் சாற்றுமறை நாளில் காலையில் திருவீதியில் தாடீ பஞ்சகம், ஆளவந்தார் ஸ்தோத்ரம், யதிராஜவிம்சதி ஸேவை. கோஷ்டியில் ஸ்வாமிகள் எம்பெருமானாரது திருவவதாரத்தால் குதூகலத்துடன் தமது உத்தரீயத்தை மேலே வீசி "விஜயீ பவ! ஸ்வாமி எச்சரிகை" என்ற கோஷத்துடன் திருவீதிகளில் கோஷ்டியில் அணிசெய்வர். திருமஞ்சனத்திற்கு முன் கத்யத்ரயம் ஸேவை-

தினந்தோறும் சாயங்காலம் மங்களாசாஸனத்தின்போது தாடீ பஞ்சகம், யதிராஜவிம்சதி, ஆளவந்தார் ஸ்தோத்ரம் இவை ஸேவிப்பர்.

சாற்றுமறையன்று இரவில் பொதுவாக உடையவருக்கு மாத்திரம் திருவீதிப் புறப்பாடு; வருஷோத்ஸவங்கள் கலந்தால் பெருமாளுடன் புறப்பாடு.

(4) ஐப்பசி மாஸம்-ஸ்ரீ மணவாள மாமுனிகளின் உத்ஸவம். முதல் எட்டு நாட்கள் இரவில் புறப்பாடு. ஒன்பதாவது உத்ஸவம் இரண்டு வேளையும். பத்தாந் திருநாள் அவதார உத்ஸவம்- காலையில் ஸ்ரீ பார்த்தஸாரதி பிராட்டிமாருடன் திருக்கைத்தலத்தில் எழுந்தருளி ஸ்ரீ மணவாள மாமுனிகளுக்கு ஸேவை அருளுவர். பின்பு ஸ்ரீ மணவாள மாமுனிகளை அநுக்ரஹிப்பதற்காகத் திருவிதிப் புறப்பாடு. முதலில் பேயாழ்வார் ஸந்நிதியில் திருமண்டபம்.

மணவாள மாமுனிகளின் உத்ஸவத்தில் பத்து நாளும் மங்களாசாஸநத்தின் போது யதிராஜவிம்சதியும், வரவர முனி சதகமும் ஸேவிப்பர். சாற்றுமறையன்று புறப்பாட்டின்போது ஆறுஜதை குடைகளின் நிழலில் பெருமாள் எழுந்தருள்வர்; உபதேசரத்தினமாலை ஸேவை. திருமஞ்சனத்திற்குப்பின் திருப்பாவை, பெரிய திருமொழி, திருவாய்மொழி நூற்றந்தாதியும் ஸேவை.

**மார்கழி மாஸம் திருப்பாவை ஸேவாக்ரமம்**

முதல் நாள் பெரிய ஸந்நிதியில்

அந்தராள மண்டபத்தில் பஞ்ச சாந்தி ஸேவித்த பின்பு ஸ்ரீபார்த்தசாரதி, ஆண்டாள், உடையவர், மணவாள மாமுனிகள் இவர்களுக்கு முறையே தளிகை அமுது செய்வித்து, கற்பூர ஆரத்தி யான வுடனே மஹா மண்டபத்தில் திருப்பள்ளி யெழுச்சி, திருப்பாவை (4 பாதமும்), பின்பு வேதவல்லித் தாயார், வரதராஜன், அழகிய சிங்கர், ஆண்டாள் ஸந்நிதிகளில் திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை (முன்னடி பின்னடி). மற்றை நாட்களில் பெரிய ஸந்நிதியில் மந்த்ரபுஷ்பம் ஆனவுடன் ஸேவை தொடக்கம்.

**ஆண்டாள் நீராட்ட உத்ஸவம்:** மார்கழி 21 ஆவது தேதியிலிருந்து ஆண்டாளுக்குப் புறப்பாடு; அந்நாட்களில் தனுர்மாதஸேவாகாலம் வீதியில் சேவிக்கப்படும் நீராட்ட மண்டபத்தில் திருமஞ்சனம். சாற்றுமுறை ''கூடாரை வெல்லுஞ்சீர்'' பாசுரத்தன்று பெருமாளோடு சேர்த்தி; சாற்றுமறை தினத்தில் போகி திருக்கல்யாணம்; மறுநாள் சங்கராந்தியன்று பெருமாளுடன் வீதிப்புறப்பாடு.

SRIVATSAM

**எம்பெருமான்களுக்கு விசேஷ உத்ஸவங்கள்**

1. வைகாசி - வஸந்தோத்ஸவம் - ஸ்ரீ பார்த்தஸாரதிக்கு-ஏழு நாட்கள் வஸந்த மண்டபத்தில் திருமஞ்சனம், பின்பு மண்டபஞ்சுற்றிப் புறப்பாடு, பந்தலில் பத்தி உலா, வீதியில் இயற்பா ஸேவை. சாற்றுமறையன்று குதிரை நம்பிரான் மேல் புறப்பாடு, சுக்லபக்ஷம் தசமியன்று சாற்றுமுறை.

2. ஆனி-கோடை உத்ஸவம் ஸ்ரீ பார்த்தஸாரதிக்கு, ஏழு நாட்கள். பெருமான் தனியாகவும் பிராட்டிமார் தனியாகவும் இரண்டு தோளுக்கினியானில் எழுந்தருளி வஸந்த மண்டபத்தில் ஊஞ்சல் பத்தி உலா. வீதியில் இயற்பா ஸேவை. தொடங்கும் நாள்...சுக்லபக்ஷம் பிரதமை.

3. ஆடி-பௌர்ணமி-ஸ்ரீ பார்த்தஸாரதி கருடஸேவை. கஜேந்த்ர மோக்ஷம்-சாயந்திரம் புறப்பாடு.

4. ஆடி-க்ருஷ்ண ப்ரதமை. ஸ்ரீ பார்த்தஸாரதிக்கு ஜ்யேஷ்டாபிஷேகம்,-மறுநாள் பெரிய திருப்பாவாடை.

5. ஆவணி-ஸ்ரீஜயந்தி-உறியடி.

6. ஆவணி-திருப்பவித்ர உத்ஸவம்-7ஆம் நாள்-சுக்ல தசமியிலிருந்து. ஏழாவது நாள் சாற்றுமறை. திருவீதியில் இயற்பா ஸேவை. இரவு திருவாய்மொழி.

7. ஐப்பசி–தீபாவளி உத்ஸவம்.

8. கார்த்திகை - திருக்கார்த்திகை உத்ஸவம்.

9. கைசிக த்வாதசி-கைசிக புராண படனம். கோஷ்டியில் ஸேவை. விற்பெரு விழவும், எங்ஙனேயோ, அக்குப்புலியின். மாலை வஸந்தோத்ஸவ பங்களாவில் வன போஜநம்.

10. தை-புஷ்யம்-ஸேனை முதலியாருடன் புறப்பாடு-நெல் அறுவடை (அளத்தல்).

11. ரத ஸப்தமி-காலையில் ஸூர்ய ப்ரபை, இரவு சந்த்ர ப்ரபை, காலையில் ஸேவை: திருவந்தாதிகள் 1, 2 இரவு ஸேவை: திருவந்தாதிகள் 3, 4.

12. மகம் (பௌர்ணமி): ஸமுத்ரத்தில் கோபுரத்திற்கு நேர் எதிரிலுள்ள தீர்த்த கட்டத்தில் தீர்த்தவாரி. காலையில் கருட ஸேவை, இரவு சேஷவாகனம். காலையில் ஸேவை: திருவந்தாதிகள் 1, 2 இரவு ஸேவை. திருவந்தாதிகள் 3, 4.

13. மாசி-சுக்ல த்வாதசி-மந்நாதனுக்கும் வேதவல்லித் தாயாருக்கும் திருக்கல்யாணம்.

14. மாசி-அமாவாஸை முதல் 7 நாள் தெப்ப உத்ஸவம் (திருப்பள்ளி யோடம்). ஸ்ரீ பார்த்தஸாரதிக்கு 3 நாள்; அழகிய சிங்கர், மந்நாதன், ஸ்ரீராமன், தேவப் பெருமாள் இவர்களுக்கு ஒவ்வொரு நாள்.

முதல் உத்ஸவத்தில் தெப்பத்திலிருந்து இறங்கியதும் நீராட்ட மண்டபத்தில் திருவாராதனம். பின்பு சிறிய திருத்தேரில் வீதிப் புறப்பாடு. தெப்பத்தில்

ஸேவை முதலாயிரம்; திருவீதியில் இயற்பா.

15. மாசி-தவன உத்ஸவம்: தவன உத்ஸவ பங்களாவில் காலசந்தி யான வுடன் எழுந்தருளித் திருமஞ்சனம், இரவு பத்தி உலா, திருவீதிப் புறப்பாடு-ஸேவை இயற்பா.

ஸ்ரீ பார்த்தஸாரதிக்கு 5 நாள் உத்ஸவம் தெப்ப உத்ஸவம் முடிந்த மறுநாள் முதல்.

ஸ்ரீ அழகிய சிங்கருக்கு 3 நாள் உத்ஸவம் ஸ்வாதி முதல். தேவப்பெருமாளுக்கு அஸ்த நட்சத்திரத்தன்றும் சக்கரவர்த்தி திருமகனுக்கு ஸ்ரீ ராம நவமி உற்சவத்தில் நான்காவது நாளும் பங்களாவில் நடைபெறும். மந்நாதன் - வேதவல்லித் தாயாருக்கு மணவாள மாமுனிகளோடு சேர்ந்து திருமூலத்தன்று சந்நிதிக்குள் நடக்கும்.

16 பல்லவ உத்ஸவம்: ஸ்ரீமந்நாதனுக்கு. தொடக்கம்......தினம் புராண படனம், பின்பு திருவீதிப் புறப்பாடு-பங்குனி உத்திரத்தன்று வேதவல்லித் தாயாருடன் சேர்த்தி: வீதியில் நாச்சியார் திருமொழி ஸேவை; சேர்த்தியில் ஸ்வாமி எம்பெருமானார் திருமுன்பில் கத்யத்ரயம். மற்றை நாட்களில் வீதியில் ஸேவை இயற்பா.

17. யுகாதி வருஷப் பிறப்பு. ஆஸ்தானம்-பஞ்சாங்க ச்ரவணம்.

18. ஸ்ரீராம நவமி உத்ஸவம். வீதியில் இயற்பா. ஸ்ரீராம நவமியன்று ஸேவை: பெருமாள் திருமொழி.

19. வைகாசியில்-வரதராஜன் உத்ஸவம்-சாயந்திரம் புறப்பாடு.

20. திருவூறல் உத்ஸவம். பெரும்பாலும் மாசியில் ஸௌகர்யப்படும் ஞாயிற்றுக் கிழமை சைதாப்பேட்டை ஈக்காட்டுத் தாங்கலுக்கு எழுந்தருள்வது.

**ஆழ்வார்-ஆசாரியர்கள் அவதார உத்ஸவம்:**

ஸ்ரீ பார்த்தஸாரதிகூட எழுந்தருளியிருந்து திருமஞ்சனம், திருவீதிப் புறப்பாடு கண்டருள்வது :

(1) வைகாசி: விசாகம்-நம்மாழ்வார்.

(2) ஆனி: ஆளவந்தார்.

(3) ஆடி-திருவாடிப்பூர உத்ஸவம் 10 நாள். சாயந்திரம் ஆண்டாளுக்குப் புறப்பாடு ஆனபிறகு உள்ளே மாலை மாற்றுதல், பார்த்தஸாரதி ஆண்டாளுக்கு ஊஞ்சல், திருவாய்மொழி ஸேவை. பத்தாவது நாள் சேர்த்தி.

(4) புரட்டாசி-திருவோணம்: வேதாந்தாசார்யர்.

(5) ஐப்பசி-திருவோணம்: பொய்கையாழ்வார், பிள்ளை லோகாசார்யர்; அவிட்டம்: பூதத்தாழ்வார், சதயம்: பேயாழ்வார், பெருமாள் பேயாழ்வார் ஸந்நிதியில் திருமஞ்சனம், கோஷ்டி கண்டருள்வர்.

(6) கார்த்திகை: திருமங்கை யாழ்வார், திருப்பாணாழ்வார்.

(7) மார்கழி: கேட்டை: தொண்டரடிப்பொடியாழ்வார்.

(8) தை-புனர்வஸு: எம்பார்

(9) தை-ஹஸ்தம்: கூரத்தாழ்வான்

(10) மாசி-புனர்வஸு: குலசேகரப் பெருமாள்.

**ஸ்ரீ அழகிய சிங்கர் எழுந்தருளி நடக்கும் வருஷ திருநக்ஷத்ரம்:**

(1) ஆனி-ஸ்வாதி: பெரியாழ்வார். ப்ரம்ஹ உத்ஸவத்தில் இந்தத் திருநக்ஷத்ரம் வராவிட்டாலும் அழகிய சிங்கர் கருட வாகனத்தில் எழுந்தருள்வார்.

(2) ஆனி-அநுஷம்: நாதமுனிகள்

**ஸ்ரீ வரதராஜன் எழுந்தருளி நடக்கும் வருஷ திருநக்ஷத்ரம்:**

(1) தையில்-மகம்: திருமழிசைப் பிரான்.

நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், பேயாழ்வார், எம்பெருமானார், மணவாள மாமுனிகள், ஆண்டாள். இவர்களுடைய மாஸத் திருநக்ஷத்ரத்தின் போது வாழி திருநாமம் ஸேவிக்கப்படும்.

SRIVATSAM

**நவராத்ரி உத்ஸவம்**

புறப்பாட்டின்போது சிறிய திருமடல் ஸேவை. ஸரஸ்வதி பூஜையன்று மங்நாதனும் வேதவல்லித் தாயாரும் சேர்ந்து புறப்பாடு. மகாநவமியன்று வேதாந்தாசார்யர் திருநக்ஷத்திரம் நேர்ந்தால் மங்நாதனுடன் வீதிபுறப்பாடு. இராமாநுச நூற்றந்தாதி ஸேவை.

விஜயதசமியன்று அம்புபோட ஸ்ரீ பார்த்தஸாரதி வஸந்தோத்ஸவ பங்களாவுக்கு எழுந்தருள்வர். வீதியில் திரும்புகாலில் ஸ்தோத்ரபாடம் கோஷ்டி. வேதாந்தாசார்யர் சாற்றுமறை நாளாக இருந்தால் மேலே வீதியில் வேதாந்தாசார்யர் எழுந்தருளப் பெருமாளுடன் புறப்பாடு–இராமாநுச நூற்றந்தாதி ஸேவை.

**அநத்யயநத்தின்போது ஸேவாக்ரமம்**

காலையில் : கால ஸந்தியில் உபதேச ரத்னமாலை (முன்னடி-பின்னடி),-இரண்டு ஸந்நிதிகளிலும்.

சாயங்காலம் : உபதேசரத்னமாலை (4 பாதமும்), திருநக்ஷத்ரமாக இருந்தால், உபதேசரத்னமாலையும் திருவாய்மொழி நூற்றந்தாதியும் (முன்னடி – பின்னடி), நம்மாழ்வார், உடையவர், மணவாள மாமுனிகள் இவர்களது திருநக்ஷத்ரத்தில் இவை 4 பாதமும் ஸேவை.

குறிப்பு :

உத்திரம், ஹஸ்தம் இவை சில வருஷங்கள் ஒரே நாளில் வரும். அந்த நாளில் வேதவல்லித் தாயாருக்குத்தான் புறப்பாடு; காரணம் : வேதவல்லித் தாயாரின் ப்ராதான்யம்.

வெள்ளிக்கிழமையோடு ரோஹிணி, ஸ்வாதி, ஹஸ்தம், திருவோணம், புனர்வஸு கூடினால், தாயாருக்குப் புறப்பாடில்லை; அந்த அந்த எம்பெருமானுக்கே புறப்பாடு.

வெள்ளிக்கிழமையுள் ரேவதி வந்தால், மங்நாதனுக்கு மாடவீதிப் புறப்பாடு, பின்பு தாயாருடன் சேர்ந்து உள்ளே புறப்பாடு; வீதியில் ஸேவை; திருவந்தாதி, உள்ளே: சிறிய திருமடல்.

SRIVATSAM

—0—

ஸ்ரீ ராமகிருஷ்ணமடம் ஸ்ரீ அஹோபில மடம், ஓரியண்டல் மேலுயர் நிலைப்பள்ளி போன்றவைகளிலும் மற்றும் பல வைதிகத் துறைகளிலும், ஆன்மீக ஸ்தாபனங்களிலும் தர்ம காரியங்களில் அடிக்கடி ஈடுபட்டுத் ''தர்மம் தலைகாக்கும்'' என்ற சான்றோர் சொல்லை நிலைநாட்டத் தற்காலத்தில் உதாரணமாக விளங்குபவர் நல்லி குப்புஸ்வாமி செட்டியார் அவர்கள். அறம் வளர்க்கும் கையினர்; சான்றோர் மெய்ம்மறை.


SRIVATSAM

நம் பார்த்தஸாரதி பெருமான் ப்ரதி வருடம் ஈக்காட்டுத் தாங்கல் உத்ஸவம் கண்டருளும்போது தமது விற்பனைக் கூடத்தில் பெருமாளுக்கு மண்டபப்படி நடத்தி, உபசாரமாய் விலையுயர்ந்த தகடி (பட்டு) சாத்தி வருவதை மறக்க முடியாது. அதுபோல் நமது வேத அத்யாபக கோஷ்டி 1982-இல் தமது 760ஆவது வருடக் கொண்டாட்டம் நடத்துவதைக் கேட்டவுடன் தாமே முன்வந்து அவ்வருடம் பிரம்மோத்ஸவத்தில் 7ஆம் திருநாள் (திருத்தேர்) மத்தியானம் ஸந்நிதியைச் சேர்ந்த அனைத்து உள்துறை, வெளித்துறை கைங்கர்யபரர்கள், அர்ச்சகர்கள், அத்யாபகர்கள், நிர்வாக அதிகாரி தொடங்கிக் கோயில் சிப்பந்திகள் அனைவருக்கும் மற்றும் ஸ்ரீ பாதம் தாங்குவோர் எல்லோருக்கும் அவரவர்களுக்குத் தகுந்தாற்போல் உயர்ந்த விலையில் மொத்தம் ரூ. 5,000 மதிப்புள்ள வேஷ்டி உத்தரீயங்களை வழங்கியதைப் பாராட்டி இதன் மூலம் ஆசி தெரிவிக்கிறோம்.

திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி
தேவஸ்தான வேத அத்யாபக கோஷ்டி.

## ஸ்ரீபார்த்தஸாரதி

சில விசேஷ சேவைகள்



SRIVATSAM





ஸ்ரீமங்காதன் வேதவல்லித்தாயார் திருக்கல்யாணம்
Ranganatha – Sri Vedavalli Thayar Marriage



ஸ்ரீ வேதவல்லித்தாயார் ஹம்ஸ வாகனம்
(சரஸ்வதி திருக்கோலம்)
Sri Vedavalli Thayar—Hamsa Vahana
Saraswathi Tirukkolam



ஸ்ரீ வேதவல்லித்தாயார் (கஜலக்ஷ்மி)
Sri Vedavalli Thayar (Gajalakshmi)

ஸ்ரீ தேவப்பெருமாள் கஜேந்திரமோக்ஷ திருக்கோலம்
Sri Varadaraja—Gajendra Moksha Tirukkolam

SRIVATSAM



ஸ்ரீராமன் பட்டாபிஷேகத் திருக்கோலம்
Sri Rama Pattabhishekam



அழகியசிங்கர் புஷ்பப் பல்லக்கு (விடாயாற்றி சாத்துமுறை)
Flower Palanquin (bedecked with flowers)

திரு அத்யயன உற்சவம் – திருக்கோலங்கள் பகல் பத்து
Adhyayana Utsava Day Session

SRIVATSAM



ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்ரீ ஆழ்வார் ஆசாரியர்களுடன்
Sri Parthasarathy with Alwars and Acharyas

1-ஆம் திருநாள் மூலவர் வேங்கடகிருஷ்ணன் திருக்கோலம்
Venkatakrishna (Moolavar Pose)



2-ஆம் திருநாள் வேணுகோபாலன் திருக்கோலம்
Venugopalan (with Flute)

இராப் பத்து
Night Session



2-ஆம் திருநாள்
வேணுகோபாலன் திருக்கோலம்
Venugopalan



6-ஆந் திருநாள்
திருவேங்கடமுடையான் திருக்கோலம்
Venkatachalapathi Tirukkolam (as at Tirumala)



8-ஆந் திருநாள்
மன்னார்குடி ராஜகோபாலன் திருக்கோலம்
Rajagopalan Tirukkolam



9-ஆந் திருநாள் கோவர்த்தனகிரி திருக்கோலம்
Govardhanagiri Dharana (Lifting aloft the Govardana Hill)

SRIVATSAM



ராதாகிருஷ்ணன் திருக்கோலம் [Radhakrishna]



SRIVATSAM

அன்னகூட உற்சவம் [Annakoota Utsavam]
(ஒருகாதில் குண்டலம், ஒரு காதில் ஓலையுடன்)



பிரதிவருடம் ரதஸப்தமியன்று மாலை அத்தமனத்தின் போது
கோபுரத்தின் தோற்றம்.
Gopura Seva at sunset on Rathasapthami day



1903-இல் செய்த தர்மாதி பீடத்தில் ஸேவை
Dharmadhi Peeta **Seva** at the time of its Presentation in 1903 A.D.



மற்ருெரு தோற்றம்
Another view

SRIVATSAM